# தமிழ்ச் சோலை

அல்லது

# கட்டுரைத் திரட்டு

## (இரண்டாம் பகுதி)

ஆக்கியோன் .

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார்


சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை

சென்னை

1935




விலை ரூபா 1-8-0

# முகவுரை

போதகாசிரியத தொழிலை விடுதத பின்னைப் பததிரிகாசிரியத தொழிலை மேறகொண்டேன ; 'தேசபகதன' 'நவசகதி' என்னும் இரண்டு பததிரிகைகடகு ஆசிரியனுனேன.

1917-ம் ஆணடு டிசமபா மாதம் 7-ம் நாள் 'தேசபகதன்' (தினப பதிபபு) ஆசிரிய பீடததில் அமாநதேன ; 1920 ம ஆண்டு ஜூலை மாதம் 22-ம் நாள் அதனினின றும விலகினேன. பினனே 1920-ம் ஆணடு அக்டோபா மாதம் 22-ம் நாள் 'நவசகதி' (வாரப் பதிப்பு) தொடங்கப்பட்டது. 'நவசகதி' ஆசிரியனுகப் பதின்மூனறு ஆண்டு சேவை செயதேன.

'நவசகதி'யின பததாம் ஆண்டில் அரசாங்கததாரால் ஈடு காணம கேட்கப்பட்டது. அது காரணமாக 'நவசகதி' ஆறு மாத காலம நிறுததப்பட்டது. இவவாறுமாத காலததில் ஏறபட்ட கஷ்ட நஷ்டஙகள், 'நவசக்தி'யை இடையிடையே கிரகணம பறறுமாறு செயதன. அதன பயனுக இப்பொழுது 'நவசகதி' மீண்டும நின் றிருககிறது.

'தேசபகத'னும், 'நவசக்தி'யும் அரசியற் கிளர்ச்சிககெனத தோறறுவிக்கப்பட்ட பததிரிகைகளாதலால், அவைகளில் பெரிதும் அவவப்போதைய அரசியல் நிலையை ஒட்டி ஆசிரியக கட்டுரைகள் எழுதப்படுவது வழககம் ; சிலபோது பொதுக கட்டுரைகளும் எழுதப் படுவதுணடு.

'தேசபக்த'னில் என்னுல் எழுதப்பெற்ற பொதுக் கட்டுரை களில ஒரு சிறு பகுதி நூலாக வெளிவநதுள்ளது. அநநூலின பெயா 'தேசபகதாமிாதம்' எனபது.

'நவசக்தி'யில ஆசிரியக் கடடுரைகளுடன, முதற பககததில் 'சிலம்பொலி' என்னும தலைப்பினகீழ் வேறு பல கட்டுரைகளும் என்னுல் வரையப்பட்டுள்ளன. அவ்வாசிரியக் கட்டுரைகளிலும், 'சிலம்பொலி'க கட்டுரைகளிலும் பொதுவாயுள்ளனவறறை நூல் வடிவில் வெளியிடுமாறு தோழர் சிலா விருமபினர்.

அக்கட்டுரைகளை யெல்லாம் திரட்டி வெளியிடின் நூல் தொகையில் பெருகும். அவ்வளவு அநாவசியம். சில கட்டுரைகளைத் திரட்டி நூலாக்கி இரண்டொரு பகுதிகளாக வெளியிடும் முயற்சியில் தலைப்பட்டேன்.

பலதிறக் கட்டுரைகளால் ஆக்கப்பெற்ற இந்நூலுக்கு எப்பெயர் சூட்டுவது என்று எண்ணலானேன். பலதிற மரஞ்செடி கொடி முதலியவற்றைக் கொண்ட சோலைமீது என்னது எண்ணம் சென்றது. அவ்வெண்ணம், 'தமிழ்ச்சோலை' என்று பரிணமித்தது.

'தமிழ்ச்சோலை' ஓர் ஒழுங்குபட்ட நூலன்று. பலவேறு காலங்களில் பலவாறு எழுதப்பெற்ற கட்டுரைகளைக் கொண்ட ஒரு நூல் எங்ஙனம் ஒழுங்குபட்டதாகும்? பலவகைக் கலம்பகங்களைத் தொடர்புபடுத்தலும் அருமையன்றோ? தலைப்புக்களையொட்டி ஒரு வழியில் கட்டுரைகள் கோவை செய்யப்பட்டிருக்கின்றன. பொருளில் சில தொடர்பு பெற்றும், சில தொடர்பு பெறாமலும் இருக்கும்.

இந்நூற் கட்டுரைகள் யாவும் 'நவசக்தி'யில் வெளிவந்தவை. அவைகளுள் பெரும்பான்மையன, 'நவசக்தி'க்கென்று எழுதப்பட்டன; சிறுபான்மையன, நண்பர்கள் விருப்பத்துக்கிணங்கி, அவர்களால் நடத்தப்பெறும் பத்திரிகைகட்கென்று வரையப்பெற்றன; மிகச் சில சொற்பொழிவுகளும் இருக்கின்றன. இவைகள் 'நவசக்தி'யில் வெளிவந்த முறைப்படி, கட்டுரைகளின் அடியில் நாட்கள் குறிக்கப்பட்டுள்ளன.

ஆசிரியர் முறையில் எழுதப்பெற்ற கட்டுரைகளில் தன்மைப் பன்மையும், மற்றக் கட்டுரைகளில் தன்மை ஒருமையும் பெய்யப்பட்டிருத்தல் கவனிக்கற்பாலது.

பத்திரிகைக் கட்டுரைகள் சுருங்கிய முறையில் எழுதப்படுவது வழக்கம். சில இடங்களில் விளக்கம் தேவையாயிருக்கும். இந்நூற்கண் அத்தேவை நேருமேல், என்னால் இயற்றப்பெற்றுள்ள வேறு நூல்களுடன் உறவு கொள்ளுமாறு நேயர்களை வேண்டுகிறேன். பிழை பொறுக்க.

திருவாரூர் - வி. கலியாணசுந்தரன்



# உள்ளுறை

# தமிழ்ச் சோலை

அல்லது

# கட்டுரைத் திரட்டு

## காந்தியடிகள்

உலகத்தில் அறந்தேய்ந்து மறம் மலியும் வேளையில், ஆண்டவன் அருளால் பெரியோர்கள் தோன்றி, அறம் வளர்த்து மறங் கடிவது வழக்கம். அவ்வழக்கம், கடந்த பல ஊழிகளில் நிகழ்ந்து வந்திருப்பதைச் சரித்திரங் கூறுகிறது. இந்நாளில் உலகமெங்கும் அறந்தேய்ந்து மறம்மலிந்து வருவதை உணராதாரில்லை. உணர்ந்தும், மக்கள் மறவழியில் விருப்பும், அறவழியில் வெறுப்பும் கொள்வது வியப்பே.

பண்டைக் காலத்தைப் பார்க்கிலும் இக்காலத்தில் கற்றோர் தொகை பெருகியிருக்கிறது; கல்லூரிகள் தொகை பெருகியிருக்கிறது. கற்றோர் தொகை அருகியிருந்த அந்நாளில் - மர நிழல் கல்லூரியாக இருந்த அக்காலத்தில் - அன்பும் அருளும் மலிந்த அறவழி ஒழுங்குபெற்றிருந்தது. கற்றோர் தொகை பெருகியுள்ள இந்நாளில் - கல்லூரித் தொகை பெருக்கெடுத்துள்ள இக்காலத்தில் - வன்கண்மையும் கொலையும் செறிந்துள்ள மறநெறி வளம் பெற்றிருக்கிறது. ஒருவரை ஒருவர் ஏமாற்றுவதும், ஒரு குடும்பத்தாரை மற்றொரு குடும்பத்தார் வஞ்சிப்பதும், ஒரு நாட்டாரை வேறொரு நாட்

டார் துன்புறுத்துவதும் அற நெறியோ? மறநெறியோ? அன்பர்களே ஆராயுங்கள்.

பண்டைநாளில் அச்சுக்கூடங்களில்லை; அச்சு விமானங் களில்லை. பனை ஓலைகளிலும், தோலகளிலும், தகடுகளிலும நூல்கள் எழுதப்பட்டன. செப்புததகடுகள் கற்கள் முதலிய வற்றிலும் அரிய கருத்துக்கள் வரையப்பட்டன. உபநிடதங் கள் பைபில் கொரான் முதலிய அருள் நூல்களைப பழைய காலததில் எலலாரிடத்திலுங் காண்டலரிது. இபபொழுது இவையாவும் அச்சுவிமானங்களிலேறிப் பலர் கரத்தில உலவு கின்றன. பைபில், கோடி கோடியாகப் பல மொழிகளில் அச்சிடப்படுகிறது. ஐரோப்பா, அமெரிக்கா கண்டஙகளி லுள்ள ஒவ்வோரு குடும்பத்திலும் அந்நூல் இருக்கும். மற்றக் கண்டங்களிலும் அந்நூல் பரவிவருகிறது. அந்நூலை ஓயாது ஓதும் ஐரோப்பிய உலகம் இப்போழுது எந்நிலையிலிருக்கிறது? பைபிலெங்கே? கிறிஸ்து எங்கே? அவர் சுவிசேஷமெங்கே? ஐரோப்பா, பீரங்கியில் - வேடி குண்டில் - கோலையில் - அறி வைச் சேலுத்தி வருகிறது!

இந்நாளில பயிலப்படுமு கல்வி கல்வியாகாது. ஏட்டுக் கல்வியால் என்ன பயன் விளையும்? எல்லா உயிரகளிடததி லும் அன்பு செலுததும் அறக்கல்வியைக் காணேம. வஞ் சனை சூது மோசம் பொறாமை முதலிய தீக்குணங்களை வளர்க்கும மறக்கல்வியன்றோ இப்பொழுது பரவிவருகிறது? வக்கீல் கல்வி என்ன கலவி? அந்தோ! கல்வி கலவி என்று மக்கள் படுகுழியில் வீழ்கிறார்கள்! அவர்கள் அறமென்று மறத்தை வளர்க்கிறார்கள்! என்ன கொடுமை! விலங்கி னின்றும் வநத மக்கள, தேவர்களாதற்குப் பதிலாக, மீண்டும் விலங்குகளாக வழிகோலுகிறார்கள்! என்னே காலம்!

உலகில் மக்கள்நிலை குன்றிவரும் இந்நாளில், அவர்கள் நிலையைப் பண்படுத்த ஒரு பெரியார் தோன்றியிருக்கிறார். அவர் யார்? அவர் மகாதமா காந்தி. அவர் இப்பொழுது எங்கே யிருககிறார்? சிறையிலிருக்கிறார். உலகுய்ய, அறம் வளர, அன்பு பெருக, அருளோங்கத் தோன்றிய ஒரு பெரி

யார் சிறையில் வதியுங்காலம் அறம் பெருகியுள்ள காலமாமோ? அறமும சிறைப்படுங் காலமன்றோ இககாலம்? இக்காலததின் கொடுமையை என்னென்பேம! என்னென்பேம! அறவடிவாகவுள்ள ஆண்டவனே! உன் திருவிளையாடலெனனே! என்னே! உன்னால் அனுப்பப்பட்ட பெரியோர் சிறையில் உறைகிறார்!

காந்தியடிகள் ஏன் சிறை புகுந்தார்? எவர் பொருட்டுச் சிறை புகுநதாா? கொலலாமையை - அஹிம்சையை - உலகில வளர்ககக காநதியடிகள சிறைபுகுநதார். அவ்வறத்தை வளாககவேண்டிய இநதிய மக்கள, தஙகள் கடமையைச செவ்வனே ஆற்றாமையால, அவர்கள் பொருட்டு மகாதமா சிறை புகுநதாா. மகாத்மா சிறை புகுநத காரணத்தை ஊன்றி நோக்குதல்வேண்டும. ஏதோ அரசியல் கிளாசசி செய்து, அதன காரணமாக அவா சிறைபபட்டாா எனறு சொலவோரும் உளர். இவர் சொலவது ஸ்தூல காரணம். சூட்சுமகாரணமே கருதறபாலது.

மகாதமா காந்தி சாதாரண மனித உடல் தாஙகியவரே. ஆனால் அவர் உடலில் உள்ள ஆன்ம சக்தியோ விண்ணையும முட்டுவது. அத்தகை ஆன்மசக்தியை அவர் எஙகிருநது பெற்றார்? அவர் எஙகிருநதும் அதைப் பெறறாரில்லை. ஆன்மசக்தி என்பது ஒவ்வொருவரிடத்திலு மிருப்பது. அச்சக்தியை அறியாமல் வாழ்கிறார் மனிதர் பலா. அதற்குரிய கல்வி பயின்றால் அதை அறியலாம். வெறும் புறப்பொருட் கல்வியால் ஆன்மசக்தியின் உண்மை நினைவும தோன்றாது. இலௌகிகக கலவி மாததிரம் பெறுகிறவர் தேகாதமவாத புத்தியுடையவராக இருபபர். இலௌகிகக் கலவியோடு வைதிகக் (அறிவு - ஒழுககக்) கல்வி பெறுவோர், ஆன்ம ஆராய்ச்சி புரிந்து ஆன்ம சக்தி பெறுவர். மகாத்மா காந்தி இளமையில் இலௌகிகக் கல்வியைப் பயின்று வந்ததோடு வைதிகக்கல்வியையும் பயின்று வந்தாா; முன்னையதைக் கற்களால் கட்டப்பெற்ற கல்லூரியில் பயின்றாா; பின்னையதை வீட்டுத்தெய்வமாகிய தமது அன்னையாரிடம் பயின்றார். காந்தியடிகள், தமது அருமை அன்னையாரைக் கடவுளாகக் கொண்டு,

அவர் உரைவழி நடக்கும் அறிவு ஒழுக்கக கலவியை இளமை யில் பயின்முா. அதனுல் காநதியடிகள் தேகாதம வாதியாய்ச் சுயநலப்பேய்க்கு இரையாஞரில்லே. அவர் ஆன்மசக்திபெற்று, மற்றவர்க்கு உழைக்கும் தெய்வ வழிபாடுசெய்து, அதன் பய ஞக இப்பொழுது சிறையில் வதிகிருர். அவர் பயின்ற கல்வி- அவர் கொண்ட அறிவு ஒழுக்கம் - பெறுவோர், அவாபோல ஆன்மசக்தி பெறுவர்; தெய்வ வழிபாட்டிற் சிறநது தமது எனபையும பிறர்க்குரிமையாக்குவர்; தமக்கென வாழாது, பிறர்கனெ வாழ்வா; வருமை இடாகளே யெலலாம் இனபத தோடு ஏற்பர்.

காநதியடிகளே மகாத்மா என்று உலகம் வழிபடுகிறது. உடல் பொருள ஆவி மூன்றையும், தம வாழ்வுககெனககொள் ளாது, பிறர் வாழ்வுக்கென அர்ப்பணஞ் செய்கின்றவர் பெரி யோர்; அவரே மகாதமா ஆவர். நங் காந்தியடிகள் வாழ்வை எடுததுககொள்வோம். அவர் செலவக் குடியில பிறநதவர்; பாரிஸ்டர் பரீட்சையில தேறியவா; அத்தொழிலில் ஏராள மான வருவாய் பெறறிருநதவர்; மனேவி மக்களே உடையவர். காநதியடிகள் தமது செல்வததில் பறறுக்கொள்ளவில்லே; அப்பொருட் செல்வத்தை ஏழைகளுககுப் பயன்படுத்திஞர்; பாரிஸ்டர் பட்டத்தையும, தொழிலேயும், காறறில பறக்க விட்டார்; அவை அவருககுக் கனவுபோல தோன்றி மறைந் தன. மனேவி மக்களேயும மறற வுயிர்களேப் போல அவர் கருதலாஞர். எனவே, தமக்கென அவர் ஒன்றையுங்கொண் டாரில்லே. ஆகவே, அவரை மகாத்மா என்று உலகம் போறறுகிறது.

உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணஞ் செய்து பிறர்ககுழையாது, காடு புகுநது தவங்கிடக்க அடிகள் சென்றி ருப்பாராயின், அவரை மகாதமா என்று உலகம் போற்ருது. காநதியடிகள் தமக்குள்ள பற்றுக்களே எல்லாம் ஒழித்துப் பிறர்ககுழைக்கும் ஒரு பறறைப பற்ருக் கொண்டார். அப் பறறைப் பற்றிய எமபெருமான் உலகை நோக்கிஞர்; மக்கள் துன்பத்தைக் கண்டார்; நாடு காடா யிருப்பதைக் கண்டார்; காட்டில் வலிய விலங்குகள் எளிய விலங்குகளே வதைப்

பதைப் போல, வலியார் எளியாரை வதைப்பதைக் கண்டார்; செல்வரால வறியர் படும் பாட்டைக் கண்டார்; கண்ணீர்விட்டார்; அவர் மனங் குழைநதது. அடிகள், உலகிலுள்ள அரசாட்சிக ளெல்லாம் செல்வர் வழி நடப்பதே துக்கத் துக்குக காரணம் என்னும உண்மையைக் கண்டார்; கண்டு என் செய்தார்? செல்வ அரசாட்சிகளைச் சீர் திருததிஞல, மனித வாழ்வு விலங்கு வாழ்வாகாமல், தெய்வ வாழவாக ஓங்கும் என்று எண்ணி, உலகததுககு எளிய வாழ்வை அறிவுறுததிஞர்; அறிவுறுததியவாறு தாம நடநது காட்டிஞர்; காட்டுகிருர். முதலாவது அவரே எளிய வாழ்வை மேற் கொண்டார். அவர் ஒற்றைத் துணி அணிநது வாழ்கிருரெனில், அவரது எளிய வாழ்வை என்னென்று கூறுவது?

ஒவ்வொருவனும தனக்கு வேண்டுவனவற்றைத் தானே செய்துகொள்ள வேண்டுமென்று உலகத்துக்கு அடிகள் உபதேசித்தார. இவ்வோர் உபதேசம, உலகத்திலுள்ள உயர்வு தாழ்வு முதலிய வேற்றுமைகளை அறவே ஒழிக்கும்; அரசாட்சிகளைத திருததும. உலகம இபபொழுது ஹிம்சை மயமா யிருப்பதற்குக் காரணம், மனிதன இயநதிரங்களின் உதவி நாடிப், பலர் உழைபபை ஒரு சிலர் நுகர்நது இனபந துய்பபதாகும. மகாதமா இதைக் கண்டு அஹிம்சா தர்மத்துக்கு முதல் படியாக, அவனவனுககு வேண்டுவன வறறை அவனவனே செய்துகொள்ள வேண்டுமென்பதை அருளிஞர். இவ்வுண்மையை வலியுறுத்தவே சர்க்கா என்னுஞ சக்கரத்தை மகாத்மா தமது கரத்திலேந்திஞர்.

காநதியடிகள் உபதேசத்துக்குப் பெரிதும் தியாகம் வேண்டறபாலது. காநதியடிகளின தியாகம் உலகறிநத தொன்று. தியாக உணர்வு இலலாத மனிதன், பிறரை வருத்தித் தான் நிரம்ப உண்டு களிக்கவே விருமபுவான். இக்களியாட்டயர்வோனுக்கு என்றும் இன்பமில்லை; அவன என்றும் அசசமுடையவனுய்க கவலை யுடையவனுய் வாழ்வன். தியாகம் பெருகப் பெருகச சுதந்திர வுணர்வும் இன்ப நிகழசசியும் பெருகும. மகாத்மா, தியாகத்தைத தமக்குரிய அணியாக அணிந்து, மக்களுக்குப் பாடுபட்டுச் சிறை புகுந்து,

இன்பக் கடலில், 'நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடப்படோம் நடலை யில்லோம் ஏமாப் போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே எந் நாளுந் துன்பமில்லை' என்று இறுமாப்பொடு திளைத்திருக்கிறார். தற்கால உலகில் மகாத்மா காந்தியைப்போல இன்பம் நுகர்வோர் அரியர் என்றே கூறலாம். தியாகமுள்ள இடத்தில இன்பமில்லாமல் போகுமோ?

உலகிலுள்ள ஒவ்வொருவனும் தியாகியாய் விட்டால், அவன் வாழ்வும், அவன குடும்பமும், அவன தேசமும், அததேசம வகுக்கும் அரசாட்சி முறையும் ஹிம்சையை குறிக்கொண்டியங்குமோ? இயங்கா. தியாகத்தால் மகாத்மா காநதி பெற்ற ஆனம சக்தியை எலலாரும் பெறலாம். ஆன்ம சக்தி என்பது வெளியே இருந்து வநது புகுவதன்று. அஃது உள்ளிருந்து அரும்பி மலர்வது. அதற்குத் தியாகம அன்பு முதலியன வேண்டும்.

மகாதமா, ஆன்ம சக்தி பெற்றமையால, சிறிதும அச்ச மின்றி, ஆயுத பலத்தைப் பொருட்படுத்தாது, சாத்விக வழியில நினறு அதை எதிர்க்கிறார். ஆயுத பலத்தில் பெருநம்பிக்கையுடைய ஜெர்மெனியே இப்பொழுது காநதியடிகள உபதேசததுக்குச செவிசாய்ககிறது. ஐரோப்பாப்போரில் வெற்றி பெறற பிரான்சு தேசம், தோலவியுற்ற ஜெர்மெனி சில நிபந்தனைகளை நிறைவேற்ற இயலாமை கண்டு, அதன்மீது ஆக்கிரமிததது. ஜெர்மனி என்ன செய்கிறது? சாதவிகப்போர் முறையைக் கைக்கொண்டு நிற்கிறது. அவ்வாறே எல்லாத தேசங்களும், அத்தேச ஆட்சிகளும் காந்தியடிகள் உபதேசத்துக்குச செவிசாய்க்குங் காலம் வரும. இந்தியாவில் பிறநத நாம - தர்மத்தை யுணர்நத முனிவர்கள் வழி வநத நாம் - அஹிம்சையில் பேர் பெற்ற நாம்-என்ன செய்தல் வேண்டும்?

உலகததைத் திருத்த வநத பெரியோர் நமது தேசத்தில் தோன்றியவர்; அவரை - நம்மவர் - நம் தேசத்தார் - என்று அழைக்கும் பேற்றை நாம் பெற்றிருக்கிறோம். அவரும் நம் தேசத்தவராகவே, தேச ஆசார

வழி நின்று, தேச தருமத்தை உலகுக்கு அறிவுறுத்து கிறார். மகாத்மா காநதி உலகத்தை ஒழுங்குபடுத்த - உலகததில் அஹிமசா தர்மத்தைப் பரப்ப - நமக்கே கட்டளை யிட்டிருககிறார். நாம் என்ன செய்தோம்? செய்கிறோம்? நமது கடமையை நாம செய்தோமா? செய்கிறோமா? இந்திய சகோதரிகளே! சகோதரர்களே! உங்கள் மனச்சான்றைக் கேளுஙகள். உங்கள் வாயிலாக உலகில் அறநெறியோம்ப ஒரு பெரியாரை உங்கள் நாட்டில் தோன்றுமாறு ஆண்டவன் அருள் செய்தான். நீங்கள் அவர் சொல்வழி நிற்கிறீர்களா? அவர் சொல் யாது?

மகாதமா இநதியாவிற்கு விடுததுள்ள செய்தி என்ன? சட்டசபை, பிரிட்டிஷ் நீதிஸ்தலம், அரசாங்க உதவி பெறும் பள்ளிக்கூடம இவைகளைப் பகிஷ்கரிக்கச் சொன்னார். சகோ தரர்களே! இவவேலையைச் செய்தீர்களா? முற்றும் மாறாக வன்றோ நடக்கிறீர்கள்? சட்டசபை வேட்டை நாளுக்குநாள் வலுத்து வருகிறது. நீதிஸ்தலங்களில் வக்கீல் கூட்டம ஊற் றுப்போல் பெருககெடுத ஓடுகிறது. பள்ளிககூடங்களில் பிள்ளைகள் நிரமபித ததும்புகிறார்கள். இந்தியர்களே! என்ன நன்றி!

இன்னும் மகாதமா என்ன சொன்னார்? கதரை அணியச் சொன்னார்; கள்ளை விலக்கச் சொன்னார்; தீண்டாமையை ஒழிக்கச சொன்னார். இவ்வேலைகளையாவது நாம் செய் தோமா? இவைகளால சுயராஜ்ஜியம் வருமா என்று ஞானம் பேசுகிறோம்; தர்க்கஞ் செய்கிறோம். நாம பெரும பொறுப்பை ஏற்றுக் கொண்டோம. ஆனால் என்ன செய்தோம்? மகாத்மா தங்கடமையைச் செய்துவிட்டுச் சிறை புகுந்தார். அடிகள் அறிவுறுத்திய அஹிம்சா தருமத்தை வளர்க்க இநதிய ராகிய நாமே முதலில கடமைப்படுதல் வேண்டும.

கடவுளால் அனுப்பபபட்ட பெரியோர் - உலகை உய் விக்க வநத உத்தமர் - அஹிம்சா தர்மத்தை அறிவுறுத்திய அறிஞர் - நமது தேச காநதி - தர்மத்தின் பொருட்டுச் சிறை புகுந்த நாள், வரும் ஞாயிற்றுக்கிழமை உறுகிறது. அந்நாளைக்

கொண்டாடுங்கள். சகோதரர்களே! அன்று ஒரு வேலையுஞ் செய்யாதேயுங்கள்; அஹிம்சா தர்மத்தைச் சிந்தனை செய்யுங்கள்; அத்தருமம் உலக மெங்கணும் பரவக கடவுளைத் தொழுங்கள்; காந்தியடிகளைப் போற்றுங்கள். அவர் சொல் வழி உலகம நடநதால், உலகத்தில் மறநதேய்ந்து அறம வளரும். உபநிடதம், பைபில், கொரான் முதலிய அருள நூல களின் உண்மை உலகில் நிலவும. ஆதலால, காநதியடிகள் கூறும வழியை நாடுங்கள்; அவர் திருநாளைக் கொண்டாடுங கள். வநதே மாதரம. காநதியடிகள் வாழ்க. (16-3-1923)



# காந்தி சமயம்



காந்தியடிகள் உலகததுக்கு விடுததுள்ள செய்தியை ஆராய்நது பார்ததால், அது சமய ஞானததை அறிவுறுததுவது காணலாம. காநதியடிகள் உலகத்துககு என்ன போதிக கிறார்? சததியம அஹிமசை என்னும் இரண்டையும போதிக கிறார். இவ்விரண்டும உலகததிலுள்ள எல்லாச சமயஙகளின் அடிப்படை. சமயங்களுக்கு அடிப்படையான தருமஙகளைப் போதிக்கக் காந்தியடிகள் புறப்பட்டமையாலன்றோ, அவரை எம்மதத்தினரும் போறறுகிறார். உலகத்தில் எப்பகுதியிலும் இநநாளில் சமயங்கள் தேய்நது வருவது வெளிபபடை. மதப்பற்றும் மதவைராக்கியமும் மதவேஷமும் இப்பொழுது நிலவுகின்றனவன்றி, மதங்களின் உண்மை, செய்கையில் நில வுவதில்லை. மக்கள் சமய உண்மையை மறந்து, அரசியலை மதமாக்கொண்டு, உலகத்தைக் கலக்கி, இடர்விளைத்து வருவது கண்டு, சமயத்தின் மூலதருமங்களாகிய சததியத்தையும் அஹிம்சையையும் மகாத்மாகாநதி போதிக்கத் தொடங்கினார். காந்தியடிகள் போதிக்கும் சமயத்துககுச் 'சத்தியாக் கிரகம்' என்று பெயர்.

அரசியலால் கட்டப்பட்ட அரசாங்கங்களை அழித்து, அவைகளைச் சத்தியத்தால், அஹிம்சா தருமத்தால் அமைத்தால், உலகில் சத்தியநெறி வளரும் என்பது காநதியடிகளின் நம்பிக்கை. இக்காரணம்பற்றி அவர் அரசியல் குறியொன்றே யுடைய அரசாங்க அமைப்புக்களோடு ஒத்துழையாதிருக்கப் போதிததார். எனவே, சததியாக்கிரக சமயத்துக்கு ஒத்துழையாமை தறபோது சிறநத விரதமாயிருக்கிறது. சத்தியாக்கிரக சமயத்துக்குக் கதராடை தரிததல், குடியொழித்தல, தீண்டாமை விலககல் ஆகிய மூன்றும சிறநத அனுஷ்டானச சின்னங்களாகவும முறைகளாகவும விளங்குகினறன. இவ்விரதமும் அனுஷ்டானமும மனிதனைத தூயமைப்படுததுவன. மனிதன் தூய்மைப் பட்டால், அவன நடாததும் அரசாங்கம் முதலியனவும் தூய்மையுறும. காநதியடிகளின் சததியாககிரக சமயம், தற்போதுளள அரசாங்கங்களைத் தூய்மைப்படுததும வாயிலாக உலகததைச் சீர்திருதத வலலது.

காநதியடிகள் தம் சமயததை முதல் முதல் தேச மகா சபையாகிய காஙகரஸ்வழி வளர்கக முயன்றார். காங்கரஸும அவர் போதனையை ஏற்று நடநது வருகிறது. ஆனால் காங்கரஸில் சமயவாசனை யறியாதாரும் சோநதுள்ளமையால், அன்னார காநதியடிகளது போதனையின் நுடபததை உணராது, அரசியல அஞ்ஞானததைக் கொணாநது இடையிடை விடுகிறார். இபபொழுது காங்கரஸில் பிளவையும பிரிவையும் உண்டுபண்ணி யிருப்பவர் பெரிதும் சமயப்பற் றில்லாதவரா யிருத்தல்வேண்டும். கோபமுடையோா, வன்மமுடையோர், பொய்மாயப் பெருமை யுடையோர் ஒததுழையாமையில் சேர்நது உழைததமையாலன்றோ ஒத்துழையாமை உரம் பெறவில்லை. சததியாக்கிரக சமயததில் பற்றில்லாதாரும் காங்கரஸில நுழைநது இன்னும காங்கரஸைக் கலக்கி வருகிறா. காங்கரஸ் சததியாக்கிரகத்தை விலக்கி விட்டால், தேசத்துககு விடுதலை சமீபத்திலில்லை என்னலாம். காங்கரஸால நாட்டுககு நன்மை விளையவேண்டுமானால், அது சத்தியாககிரகததை நேரிய முறையில் அனுஷ்டித்தல் வேண்டும.

சத்தியாக்கிரக சமயத்தைக் காங்கரஸ் கை விட்டாலும் இனிதேசம கைவிடாது; தேசம்விட்டாலும் உலகம்விடாது. காஙகரஸ்காரர் அல்லாத பலரும் சத்தியாக்கிரகததை அனுஷ்டித்து வருகிறார். காநதியடிகள் சமயம் இப்பொழுது உலகத்தில் மிக விரைவாகப் பரவிவருகிறது. இவ்வேளையில இநதியாவில பிறந்த சில முதியோர், காங்கரஸைச் சததியாக கிரகததினின்றுந் திருபப முயன்று வருகிறார். அவருக்குச் சததியாககிரகம பிடியாவிடின், காங்கரஸை விடுதது நீங்கித் தனி இயக்கமொன்று உண்டாக்கிக் கொள்வது நலம்; காங்கரஸைக் கெடுக்க முயலவது பாவம. காங்கரஸ் அவர் வழித் திருமபினால், சத்தியாக்கிரகிகள், ஒரு தனி இயக்கம் கண்டு, அதன வழிக் காநதிசமயத்தை வளாப்பாாகளாக.

(6-7-1923)

# ஆண்மையும் அடிகளும்

ஆண்மை என்பது யாது? இது குறித்து விரித்துக் கூறவேண்டுவதில்லை. ஆண்மை அதனினும நல்லாண்மை என்பது யாது என்று இற்றைக்குச் சுமார் இரண்டாயிரம ஆண்டுகட்கு முன்னர் நந்தமிழ் நாட்டிற்றோன்றிய ஆண்டகையார் ஒருவர் கூறிப்போந்தார். அவ்வாண்டகையார்,

> 'நல்லாண்மை என்பது ஒருவற்குத தான்பிறந்த
> இல்லாண்மை ஆக்கிக் கொளல'

என்று கூறிப்போந்தார். இத்திருக்குறள், 'குடிசெயல்வகை' என்னும் அதிகாரத்தில மிளிர்வதாயினும், அஃது இது போழ்து நாம் பிறந்த இல்லாகிய பாரத நாட்டின்மீது எமது கருததைச செலுத்துகிறது. அக்கருத்துக்கொண்டு, அத் திருக்குறளை நோக்குமாறு ஏனைய அன்பர்களையும் வேண்டுகிறேம.

நல்லாண்மை என்பது எது? நேயர்களே! கூர்ந்து சிந்தியுங்கள். 'நல்லாண்மை என்பது ஒருவன் தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல்' என்று திருவள்ளுவனார் அறிவுறுத்துகிறார். தான் பிறந்த இல்லைப் பிறர் வயப்படுத்திக் காலங்கழிப்பது ஆண்மையாகுமோ? தனது இல்லைப் பிறர் வயப்படுத்தி வாளா காலங் கழிப்போன் நாணுடையோன் ஆகான. ஆண்மைக்குறள் மிளிரும் அதிகாரம், 'நாணுடைமை' என்னும் அதிகாரத்தின் பின்னர் வைக்கப்பட்டதுங் கவனிக்கத் தக்கது. நல்லாண்மைக்கு நாண் இயற்கை அணி போன்றதன்றோ? நாணிழந்து உலகில் வாழ்தலினுஞ் சாதலே நன்று. நாணில்லார் உயிருடைய மரந்தாவரோ?

'அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை' என்றும்

'நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாணாள் பவர்' என்றும்

'நாணகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று' என்றும்

நம் ஆண்டகையார் கூறியிருத்தல் காண்க.

நாம் பிறந்த பெரிய இல்லம் நமது நாடு. அப்பேரில்லம் நமது வழி இயங்கவில்லை எனில், நாம் பிறந்த சிறிய இல்லம் நம் வழி எவ்வாறியங்கும்? இல்லறமாகிய அக இன்பத்துக்கு ஊறு நிகழாதவாறு காக்கவேண்டுமானால், புற இன்பத்துக்கு ஊற்றாகவுள்ள நாடு நம்வழி இயங்கல்வேண்டும். உரிமை இல்லா நாட்டில் வாழும் மக்கட்கு இன்பம் இல்லை என்று தெளிவாகக் கூறலாம். இன்பத்துக்குப் பிறப்பிடம் உரிமை என்பதை விளக்கவேண்டுவது அநாவசியம். 'நாமார்க்குங் குடியல்லோம்' என்றருளிய அப்பர் சுவாமிகள், அதற்கு அவரே பொருள் விரித்தாற்போல, அதே திருப்பாட்டில், 'என்நாளும் இன்பமே துன்பமில்லை' என்று அருளியது காண்க. அடிமை நீங்கிய உரிமையிலேயே இன்ப மணம் கமழுமென்க.

நமது நாட்டிலுள்ள இல்வாழ்க்கை இப்பொழுது செவ்வனே நடைபெறுவதில்லை. வறுமையாலும், பிணியாலும், பிணக்காலும், வேறு பலவற்றாலும் பீடிக்கப்பட்டு, இல்வாழ்வு குலைந்து வருவதை நாமும் கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும், நாணமின்றி வாழ்ந்து வருகின்றோம். வறுமை முதலிய குறைபாடுகள் உறுதற்குக்காரணம் என்னை? போதிய பொருளின்மை யாகும். 'பொருளிலார்க்கு இவ்வுலகமில்' என்று ஆண்மை இயல்பு உணர்ந்த திருவள்ளுவனார் அறைதல் காண்க. 'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியுமன்றே' என்றார் மணிவாசகனாரும். இவ்வுலக வாழ்விற்குப் பொருள் இன்றியமையாதது. பொருள் வளஞ் சுருங்கச் சுருங்க இன்ப நலனும் சுருங்குதல் இயல்பு. பொருள் போக்கிற்குக் காரணம் நாம் பிறந்த இல்லம் நம் வழி இயங்காமையாகும். துணிக்கு மாத்திரம் நமது நாட்டுப் பொருள் அறுபது கோடி வெளிநாட்டுக்குப் போகிறதெனில், மற்றவற்றிற்கு எவ்வளவு பொருள் போகுமென்பதைப் பற்றிக் கூறுதலும் வேண்டுமோ? வீட்டுப்பொருள் பெரிதும் வெளி சென்றுகொண்டிருந்தால், வீட்டில் இன்பம் ஏது? இன்பம் இல்லாவீட்டில் சண்டையும் கூச்சலும் குழப்பமும் நிகழ்தல் இயல்பு. நமது நாட்டின் நிலை இதுபோழ்து எவ்வாறிருக்கிறதென்பது வெள்ளிடைமலை.

நாம் பிறந்த இல்லமாகிய பாரதநாட்டின் வளங்குறைந்து வருதலைக் காணும் மைந்தர் பலர், அக்குறைபாட்டை நீக்க முயலாது, குறைபாட்டிற்கே பெரிதும் முயன்று வருதல் கண்கூடு. இவ்வாறு சொல்லுதல் நியாயமோ என்று சிலர் கருதலாம். அவ்வன்பர்கள் நம்மவர்கள் செயலைச் சிறிதுநேரம் உற்று நோக்குவார்களாக. முதலாவது பள்ளியில் படிக்கும் மாணாக்கர்களைக் கவனிக்கலாம். இவர்கள் எவ்வெண்ணத்தோடு பள்ளி நுழைகிறார்கள்? 'படித்து ஏதாயினும் உத்தியோகம் பெறலாம்' என்னும் எண்ணமன்றி வேறெவ்வெண்ணம் அவர்கள் உள்ளத்தில் குடிகொள்கிறது? இளமையிலேயே இவ்வெண்ணத்துக்கு எளியராகும் மாணாக்கர், பின்னை நாட்டின் நலங்கருதி உழைப்போராதல் அரிது. அவர்கள் பயி

லும் கல்வியோ அவர்கட்கு உரிமை உணர்வு ஊட்டுவது மன்று. இப்பொழுது இத்தகை மாணாக்கர்களாயிருப்பவர்களே, பின்னைப் போலீஸ் அதிகாரிகளாகவும், மாஜிஸ்டிரேட்டுகளாகவும், கலெக்டர்களாகவும், நிர்வாக அங்கத்தவர்களாகவும் வரப்போகிறார்கள். இவர்கள் வாயிலாகத் தேசசேவையை எவ்வாறு எதிர் பார்த்தல் முடியும்?

இப்பதவி பெறாத சில மாணாக்கர் வக்கீல்களாகிறார். அவர் கருத்து வழக்கின்மீதும் பொருளின்மீதும் படிகிறதல்லாமல், உரிமையின்மீது படிகிறதில்லை. வக்கீல் கூட்டத்திலும் சில நன்மக்களிருக்கலாம். பொதுப்பட வக்கீல்கள் செய்யும் கிளர்ச்சியின் அடிப்படையை ஆராய்ந்தால், அது தன்னலத்தில் முடிவது காணலாம். இவர்கள் செய்யும் கிளர்ச்சி, அதிகாரவர்க்க அமைப்புகளில் அங்கம்பெறல் முதலியவற்றைக் குறிக்கொண்டு நிற்பதாகும்.

வக்கீலாகாத மாணாக்கர் சிலர் உற்றவயதில் வாணிபஞ் செய்யப்புறப்படுகிறார். இவர் வாணிபம் மேல்நாட்டுப்பொருளை வாங்கி விற்றுச் சிறு ஊதியம் பெறுவதாகும். இஃதென்ன வாணிபம்? இதனால் நாட்டுக்கு நலன் உண்டா? கேடு உண்டா? இவ்வாணிபம், நமது நாட்டுத் திருவை மேலநாட்டுக்குத் துரத்துவது.

மற்ற மாணாக்கர்கள் தொழிற்சாலைகளிலும், அரசாங்க சாலைகளிலும் கணிதர்களாகிறார்கள். இவர்கள் இயந்திரங்கள் போல உழன்று உழன்று ஓய்வடைந்து விடுகிறார்கள். இவர்கள் உள்ளத்தில் உரிமைத் தெய்வம் எவ்வாறு கோயில் கொள்ளும்?

கற்றவர் நிலை இவ்வாறாக, கல்லார் நிலை எவ்வாறாகிறது? அவருள் பலர் மேல் நாட்டு முதலாளிகளின் தொழிற் சாலைகளில் தொழில் புரிபவர்களாய் விடுகிறார். மற்றவர் விவசாயம் முதலிய தொழில் புரிகிறார். மேல்நாட்டுப் பொருள் மலிவால், நாட்டுத் தொழிலாளர் பலர், நாட்டுத் தொழில் புரிய இடம்பெறாது கூலியாட்களாக வெளிநாடு செல்கிறார். பாரத நாடெனும் நமது வீட்டு மக்கள் இந்நிலையுற்றிருக்

கிறார்கள்! தாம் 'பிறந்த இல்லாண்மையாக்கிக் கொள்ளுந்' திறன் நம்மவர்கள்பால் காணோம்; காணோம்.

தாதாபாய், திலகர் முதலிய ஒரு சிலர்க்கு உரிமை வேட்கை எழுந்தது. அவ்வெழுச்சிக்குத் துணை புரிய நாடு சித்தமாகவில்லை. மேற் கூறியவாறு நாட்டிற் பிறந்த மக்களே நாட்டு நினைவிழந்து வாழ்வார்களாயின் ஒரு சிலர் முயற்சி என் செய்யும்? தலைவர்கள் உழைப்பும் காங்கரஸ் முயற்சியும் பயன்படாமை கண்ட ஒருவர் 'எத்துணை நாள் நாம் பிறந்த வீட்டை நமக்குரிமையாக்காது கிடப்பது' என்றெண்ணி அறக் கிளர்ச்சி புரியத் தொடங்கினார். 'நமது வீட்டில் நமக்கு உரிமை யில்லையா' என்ற நாணுடைமை அவர்க்கு ஆண்மையை எழுப்பிற்று. அவரும் தாம் பயின்ற கல்வி வழி நின்று, பாரிஸ்டர் தொழில் செய்து, மேல்நாட்டு நாகரிகத்தில் மூழ்கி யிருப்பாரானால், ஆண்மை அவர்மாட்டும் எழுந்திராது. தம்மைப் பற்றிய தீட்டுக்கு அவர் தெனாப்பிரிக்காவில் கழுவாய் தேடிக் கொண்டமையால், தாம் பிறந்த நாடாம் வீட்டின்மீது அவரது கருத்துச் சென்றது. அதன் நிலையையுணர்ந்து, நாணுடையாராய், 'எனது வீட்டை என தாக்கிக் கொள்ளாதவரை எனக்கு வீடென்ன வாசலென்ன' என்று எல்லாந் துறந்து, நாட்டின் நிலையை அறிவிக்கும் ஒரு கோலந்தாங்கி, ஆண்மையுடன் உழைத்து வருகிறார். திருவள்ளுவனார் கூறும் நாணுடைமைக்கும் நல்லாண்மைக்கும் இலக்கியம் அப்பெரியார். அவர் யாவர்?

காந்தியடிகள் முதல் முதல் மக்கள் ஆண்மை கெடுக்கும் மூல காரணங்கள் இன்ன இன்ன என்று கண்டார். கண்டு நல்லாண்மையைக் கெடுக்கும் பள்ளிக் கூடத்தை—நீதிமன்றத்தை—சட்டசபையை—ஒழிக்குமாறு தம்முடன் பிறந்தாரை வேண்டிக்கொண்டார்; இழந்த ஆண்மையைப் பெறத் தீண்டாமையை விலக்குமாறும், ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமையை வளர்க்குமாறும், ராட்டினத்தைச் சுழற்றுமாறும் வேண்டினர். அவர் வேண்டுதல் நிறைவேறிய இடங்களில் தளர்ச்சி நீங்கி, ஊக்கமெழுந்து, ஆண்மை யுறலாயிற்று. இளவரசர்

வரவேற்பை விலக்குமளவும் ஆண்மைத் திறன் எழுந்தது.

பின்னை ஆண்மையைக் கெடுக்கும் முயற்சி தலை காட்டிற்று. மீண்டும் நம்மவர்கள் ஆண்மையைக் குலைக்கும் நெறி பற்றலாயினர். ஆண்மை மிகுந்த ஒருவர் என் செய்வார்! அவரவா சொல்வழிச் சொல்வழிக் காங்கரஸை விடுத்தார். நல்லாண்மையை வழங்கவந்த மருத்துவர், ஆண்மைக்குரிய ஒத்துழையாமையை ஒடுக்க ஒருப்பட்டாலும், அதன் உயிராக உள்ள ஒன்றை இன்னும் விட ஒருப்படவில்லை. அவ்வொன்று யாது? அதுதான் கைராட்டினம். அதன் வழித் தம்முடன் பிறந்தார்க்கு ஆண்மையை எழுப்ப அடிகள் முயலகிறார்.

காந்தியடிகள் எல்லாவற்றையும் விட்டுக் கொடுத்தார்; ராட்டினத்தை இன்னும் விட்டுக்கொடுக்கவில்லை. ராட்டினத்தை அடிகள் என்றும் விட்டுக் கொடுக்கமாட்டார். நாட்டில் ஒத்துழையாமை-தூலத்தில்-ஒடுங்கினாலும், அது-சூக்குமத்தில்-இன்னும் ஒடுங்கவில்லை என்பதை ராட்டின இயக்கம் காட்டுகிறது. காந்தியடிகள் தாங்கியுள்ள கைராட்டினத்தில் பகிஷ்கார நிர்மாண முறைகளெல்லாம் அடங்கியிருக்கின்றன. பிரணவ மந்திரம் போன்றது கைராட்டினம். மந்திரங்கட்கெல்லாம் உயிர் பிரணவ மன்றோ? கைராட்டினமும் எல்லா முறைகட்குந் தாரகம் போன்றது. இதைக் கூர்ந்து சிந்திப்போர்க்கு நுட்பம் புலனாகும்.

முதல் முதல் கைராட்டின அழிவால் நமது நாட்டின் ஆண்மை குலைந்தது. கைராட்டின அழிவால் அறுபது கோடி ரூபா நமது நாட்டை விட்டுச் செல்கிறது. இவ்வொன்றால நாட்டுக்கு விளைந்த கேடோ பெரிது. இதை உயிர்ப்பித்தால எல்லாம் நலமுறும். ஒத்துழையாமை என்னும் ஆறு, பல கிளைகளாகப் பிரிந்து நாட்டில் பாய்ந்துகொண்டிருந்தது. இப்பொழுது அக்கிளைகளெல்லாம் ஒன்றுபட்டுப் பேராறாக ஓடுகிறது. அப்பேராறே கைராட்டினம். கைராட்டினத்தில் கதர் என்னும் ஆக்கமும், பிற நாட்டுத்துணி விலக்கு என்னும் அழி

வும் அடங்கியிருத்தல் காண்க. கதர் உரிமைக்கு அறிகுறியாகும்.

இப்பொழுது நாட்டிலுள்ள கட்சித் திட்டங்களெல்லாம் ஆண்மையை எழுப்புவனவல்ல. அவையாவும் அதிகாரவர்க்க அறைகளாகிய அமைப்புக்களில் அடங்கி ஆண்மையைக் கெடுப்பனவாகும். நல்லாண்மை இயல் காந்தியடிகள் காட்டும் கைராட்டினத்தில் இருக்கிறது. சட்டசபை நுழைவும் பிறவும் வீண் ஆரவாரமன்றி ஆண்மையை ஊட்டுவனவல்ல. 'இல்லாண்மையாக்கிக் கொள்ளும்' வழியைக் காந்தியடிகள் காட்டுகிறார். கண்ணுள்ளோர் அவ்வழிபற்றி நடப்பாராக.

(9-10-1925)

# இளைஞர்களுக்கு ஒரு விண்ணப்பம்

இன்று காந்தி அடிகள் பிறந்த திருநாள். இத்திருநாள் திருநாளாகவே யாண்டுங் கொண்டாடப்படும். ஊர்வல ஒழுங்கும், விழா எடுப்பும், கூட்டச் செறிவும், வாழ்த்தொலியும் இன்று நாட்டைக் காந்தி மயமாக்கி யிருக்கும் என்பதில் ஐயமில்லை.

சிறப்பமைந்த காந்தியடிகள் திருநாளாகிய இற்றை ஞான்று நாம் என்ன எழுதுவது? எமது அருமைத் தமிழ் நாட்டார்க்கு என்ன உரைப்பது? நாம் எந்நிலையிலிருக்கிறோம்? பிற நாட்டினர் எந்நிலையிலிருக்கின்றனர்? இவ்வெண்ணமே எமது உள்ளத்தில் அரும்பி மலர்ந்து இக்கட்டுரை எழுதுமாறு உந்திற்று.

எல்லா நாடுகளும் எந்நிலையிலிருக்கின்றன? அவை உரிமை இன்பத்தில் திளைத்திருக்கின்றன. நமது நாடோ - நமது பாரத நாடோ - நேயர்களே! சிறிது நேரஞ் சிந்தியுங்கள். உங்கள் உள்ளம் உருகும்; கண்ணீர் கலங்கும். எத்துணை நாள் நாம் உரிமை யிழந்து கிடப்பது?

நமது நாட்டில் என்ன குறையுண்டு? இயற்கை வளஞ் செறிந்த நாடன்றோ நமது நாடு? மலைவளத்தில் குறையுண்டோ? நீர்வளத்தில் குறையுண்டோ? எவ்வளத்தில் குறையுண்டு? இமயம் நம்முடையது; கங்கை நம்முடையது. கருமலையின் கூட்டமும், பசுங் காட்டின் ஈட்டமும், ஆறுகளின் ஓட்டமும், கடல்களின் சூழலும் நமது நாட்டின் பொருட்காட்சி. மலைபடு பொருளும், கான்படு பொருளும், கடல்படு பொருளும் மிடையும் திருநாடு நமது பாரதநாடு. பொன்னும் மணியும் முத்தும் நெல்லும் புல்லும் கொழிக்கும் செழுமைநாடு நமது பாரதநாடு. இவ்வியற்கைப் பொருள்கொண்டு, ஞாயிற்றின் வெம்மையன்றிப் பிறிதொரு வெம்மைபடாமலும் கலப்பையன்றிப் பிறிதொரு கருவி தொடாமலும், இல்லறமாம் நல்லறம் பேணி, இயற்கை இன்பந்துய்த்து, அருநெறி யோம்பி வந்தனர் நமது பண்டை மூதறிஞர்.

அவ்வழி வந்த நம்மக்கள் இதுபோழ்து எந்நிலையி லிருக்கிறார்கள்? நகரத் தெருக்களில் சிறிது நேரம் நின்று நம்மக்களை உற்று நோக்கினால் அவர்கள் நிலை இனிது புலனாகும். எத்துணை என்புக் கூடுகள் - தோற்பாவைகள் - குழி விழுந்த கண்கள் - தசையிலா மார்பங்கள் - கூம்பிய தோள்கள் - வறறிய உடல்கள் - காட்சி யளிக்கும்! மக்கள் இருமல் ஒலி பிச்சைக்காரர்கள் கூச்சலையும் வென்று விடும். இடையிடையே தொழுநோய் புலனாகும். அகச்சோர்வுடனும் முகச் சோர்வுடனும் செல்வோர் எத்துணைபேர்! கவலையால் பித்தர்போல் நடப்போர் எத்துணைபேர்! கொழுமையுஞ் செழுமையுங் குவிந்து அழகொழுகும் மக்களைக் காண்டல் அருமையா யிருக்கும்.

இச்சிறுமை நிலை எய்தியுள்ள ஆண்மக்களும், பெண் மக்களும் கூடி நடாத்தும் இல்லறத்தில் இன்பம் நிலவுமோ? ஆடவர் மூலக் குழியும் மகளிர் கருக்குழியும் பசை யிழந்து வறட்சியுற்றிருக்கின்றன. இக்காரணத்தால் கட்டழகுக் காளைகள் பிறப்ப தில்லை. கருவினில் சிதையும் முளைகள் எத்துணை! மண்ணினுதித்ததும் மாளுங் குழவிகள் எத்துணை! ஒரு திங்களில் ஓராண்டில் சாவன எத்துணை! குழந்தை மா

என்ன? நாட்டு நலன் அதாவது நாட்டு விடுதலை என்று சொல்ல வேண்டுவதில்லை. உள்நோக்கத்தின் மறவால் இடை இடையே பலதிற இடுக்கண்கள் நேர்ந்துவிடுவது வழக்கம். மனிதன் முன்னேற்றத்தை நாடவேண்டுமே யன்றிக் கடந்த [illegible]பற்றிக் கழிவிரக்கமோ காழ்ப்போ கொள்ளலாகாது. அ[illegible]ங் கொள்ளும் மனிதன் ஒருபோதும் முன்னேற்ற மடையான். ஆதலால், அவ்வவ்வியக்கத் தலைவர், தத்தமது [illegible]டையாக உள்ள நோக்க வழி நின்று, தமிழ்த்தாய்க்குரிய தொண்டை ஆற்றப்புகுவாராக; தமிழ்நாட்டின் உயிராக உள்ள தமிழ்மொழியை ஓம்ப முயல்வாராக.

தமிழ்மொழியை ஓம்பும் இயக்கம் எதுவாயினும், அது தமிழ்த்தாயின் விடுதலையை நாடுவதாகும். தமிழ்நாட்டின் முழு விடுதலை தமிழ்மொழியின் ஆக்கத்திலேயே இருக்கிறது. மற்ற மற்ற முயற்சிகள் வேண்டாமென்று யான் கூறுகிறேனில்லை. தமிழ்த்தாய்க்குப் பலதிற அடிமைப்பாடுகள் உண்டு. ஒவ்வொன்றன் விடுதலைக்கு ஒவ்வொரு வித இயக்கம் வேண்டற்பாலதே. முழு விடுதலை தமிழ்மொழியின் ஆக்கத்திலுண்டு என்பதை மட்டும் தமிழர்கள் மறத்தலாகாது. தமிழ்மொழி ஆக்கம் பெறாமல் பெறும் விடுதலை முழு விடுதலையாகாது. ஆகவே, விடுதலை வேட்கையின் அடியில் மொழி வேட்கையிருந்தே தீரல்வேண்டும். அவ்வேட்கை பலதிறப் பிளவுகளை - பிரிவுகளை - பிணக்குகளை - ஒழிக்கும் ஆற்றல் வாய்ந்தது என்பது உறுதி.

தமிழ் மக்களே! உங்களைத் 'தமிழ் மக்கள்' என்று அழைக்கச் செய்திருப்பது எது? அதை நினையுங்கள். அதை மறந்து ஆற்றப்படும் தொண்டுகள், கடைக்காலில்லாமல் எழுப்பப்படும் கட்டடம் போன்றனவாகும். நீங்கள் எத்தொண்டு செய்யினும் அத்தொண்டின் அடிப்படையில் தமிழ்வேட்கை எழுச்சி இருத்தல் வேண்டும். அவ்வேட்கையால், உங்களைப் பல்வாறு பிரித்துப் பிளக்க, உங்கள்பால் இடைநாளில் தோன்றிய சாதி மதப் பூசல்கள், உங்களை விடுத்து இரிந்து ஓடும். அவ்வாற்றல் அமிழ்தினும் இனிய தமிழ்வேட்கைக்கு உண்டு என்பதை மறவாதேயுங்கள். தமிழ் மொழியின் ஆக்

கத்துக்காகவே தமிழ்க் காவியங்கள் எழுந்தன. அவை நாள டைவில் கதை நூல்களாகக் கொள்ளப்பட்டன. தமிழின் ஆக்கம் அருக அருகச் சகோதரர்களின் கண்ணுக்குத் தமிழ்க் காவியங்களிலுள்ள தமிழணங்கின் இன்பக் கூத்துப் புலனா தல் அரிதாயிற்று. அவர்கட்குப் பெரிதும் கதைகளே புலனா கின்றன. ஆதலால் சகோதரர்களே! தமிழ்க் காவியத்தில் தமிழணங்கைக் காண எழுங்கள்; தலைவர்களே! அவளைக் காட்ட எழுங்கள். அக்காட்சிக்கென எல்லாரும் ஒன்றி மகா நாடு கூட்டுங்கள்; உங்கள் தாயின் சிறை போம்; நோய் போம்; குறை போம். அவள் விடுதலை யடைவாள். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் கொள்கை மீண்டும் தமிழ் நாட்டில் அரசு புரியும். உங்கள் வேற்றுமைகள்—பிணக்கு கள்—பூசல்கள்—எல்லாம் பறந்து ஓடும்; ஓடும்.

(18, 25—11—1931)

# தமிழரியக்கம்

தமிழ்நாட்டின் தற்கால நிலையைப்பற்றி விரித்துக் கூற வேண்டுவதில்லை. தமிழ்நாடு என்றொன்று இப்பொழுதிருப்ப தாகவும் சொல்லுதல் முடியாது. தமிழ்நாடு இல்லாமல் யாண்டுச் சென்றது என்று சிலர் ஐயுறலாம். தமிழ்நாட்டு உடல் இருக்கிறதேயன்றி, உயிரில்லை என்று சொல்வது மிகை யாகாது. தமிழ்நாடு என்பது, தமிழ் மக்களின் வழக்க ஒழுக் கம் கல்வி அரசு வீரம் தொழில் முறைகள் முதலியன சேர்ந்த ஒன்றாகும். இத்தமிழ்நாடு இதுபோழ்து யாண்டுளது? வெறும் நிலத்தைத் தமிழ்நாடு என்று சொல்லி மகிழ்வதால் என்ன பயன்?

தமிழ்நாட்டார் அனைவரும் இதுபோழ்து தம்மைத் 'தமி ழர்' என்று கருதுகிறார் என்பது உன்னற்பாலது. தமிழருக் குள் தமிழரென்னும் ஒன்றிய எண்ணமிருப்பின், அவர்க

ளிடை வகுப்புப் பிணக்கு ஏன் எழுதல்வேண்டும்? தமிழ்நாட்டில் வகுப்புப் பிணக்கு இதுபோழ்து இல்லை என்று மறுத்தல் இயலாது. அப்பிணக்குண்மை எவரும் அறிந்ததொன்று. தமிழ்நாட்டில் எழுந்துள்ள வகுப்புப் பிணக்குத் தமிழ்மக்களின் வழக்க ஒழுக்கம் கல்வி வீரம் முதலியவற்றைக் கல்விக் கலித் தமிழ் நாட்டையே அழித்துவிடும். ஆதலால், வகுப்புப் பிணக்கை ஒழிக்க ஒவ்வொரு தமிழரும் முயலல்வேண்டும்.

தமிழ்நாட்டில் பல சாதியார் பல சமயத்தார் இருத்தல் உண்மை. அவரனைவரும் தமிழரா அல்லரா என்பதை ஆராய்ந்தால் அவர் தமிழராகவே யிருப்பர். ஒருசிலர் மற்ற நாடுகளிலிருந்து குடிபுகுந்தவராக இருக்கலாம். அவ்வொரு சிலரும் தமிழ்நாட்டைத் தாய்நாடாகக் கொண்டமையான், அவருந் தமிழராகி விட்டனர். தமிழ்நாட்டைத் தாய்நாடாகக்கொண்டு, தமிழைத் தாய்மொழியாகக் கொண்டோர் அனைவரும் தமிழரே யாவர்.

தமிழ்நாட்டில் ஆரியர் தமிழர் என்னும் பிரிவு இருப்பதாகச் சிலர் கருதுகிறார். அது குறித்தெழும் வாதங்களுக்கும் அளவில்லை. தமிழ்நாட்டிலுள்ள பிராமணர் ஆரியரென்றும், பிராமணரல்லாதார் தமிழரென்றுஞ் சிலர் சொற்போரும், சிலர் வேறு போரும் நிகழ்த்துகிறார். தமிழ்நாட்டிலுள்ள பிராமணர்கள் தமிழர்கள் என்பது நமது கொள்கை. இது குறித்துப் பன்முறை நாம் எழுதியிருக்கிறோம். இது 'நவசக்தி' நேயர்கட்குப் பழம்பாடமாகவு மிருக்கலாம். நாட்டுநிலை காலநிலை முதலியவற்றை நோக்கி, இதைப்பற்றி அடிக்கடி வலியுறுத்தவேண்டிய கடனை ஏற்று நிற்கிறோம்.

வடபுலத்திருந்து சில ஆரியர் தமிழ்நாடு போந்தது சரித்திரவாயிலாக அறியக்கிடப்பது. அவ்வாரியர் தமது வழக்க ஒழுக்கம் சமயம் முதலியவற்றைத் தமிழர்க்கு அறிவுறுத்தினர். சில தமிழர் அவ்வழக்க ஒழுக்கங்களை மேற்கொண்டனர். அவரே பின்னாளில் பிராமணரென்றழைக்கப் பெற்றனர். அவருடன் வடபுலத்திருந்து போந்த ஆரியரும் ஒன்றித்

தமிழராயினர். இவ்வாறே தமிழ்நாட்டில் இஸ்லாமியகொள்கை, கிறிஸ்துவக கொள்கை முதலியனவும் பரவலாயின. பல திறக கொள்கைகளை ஏற்று, அவ்வகைகொள்கைக்குரிய பெயரையும் ஏற்றவர் தமிழ்நாட்டிற பிறநத தமிழரேயாவர். இவர்கள் தங்களைத் தமிழர்கள் என்பதை மறததலாகாது. தமிழ்நாட்டில் பல சாதியாரிருக்கலாம்; பல சமயததாரிருககலாம. அச் சாதி சமய வேற்றுமைகளைக் கருதித தஙகளைத தமிழர்க ளல்ல என்று கொண்டு போரிடுவது அறியாமை. வேற்றுமைகளிருப்பினும், அவைகளைக் களைய முயலவேண்டுமேயன்றி, வளாக்க முயல்வது அறிவுடைமையாகாது.

தமிழ்நாட்டில் தமிழர்களுககுள் பிணக்கு எழாமலே யிருநதது. சிறு சிறு பிணக்குகளும் மறைநதுகொண்டே வந்தன. அரசியல் கிளர்சசியும, தேர்தல் முறையும விரிநது பாநதெழுநத நாள்தொட்டுத் தமிழ்நாட்டில் வகுப்புப் பிணக்குக் கொழுததுவிட்டது. நாளுக்குநாள் அப்பிணக்கு வளர்நது வருகிறதே யன்றித் தேய்நது வரவில்லை. இவ்வளாசசியால் எனன விளையும்? தமிழ்நாடு வருந்தும்; அழிநதும போகும். வகுபபுப பிணககைத தணிக்கவேண்டுமென்று ஒவ்வோர் அரசியல் தலைவரும் வாயால சொல்கிறார்; ஆனால் செயலால் பிணக்கை வளர்க்கிறார். இப்பிழை, எல்லா அரசியல் கட்சிக் காரரிடததிலும் இருத்தல் உண்மை. விட்டுக கொடுக்கும் அறம அறவே அற்றுபபோயிற்று. வயது முதிர்நது ஆசைப் பேயால் பிடிக்கப்பட்டுள்ள முதியோர்கள அளவில் வகுப்புப் பிணக்கு நில்லாது, இளைஞர்களிடததும் அந்நஞ்சு பரவத் தொடஙகி யிருக்கிறது. இப்பொழுது வகுப்புப் பிணக்கு இளைஞரிடத்துப பரவாதவாறு காப்பது நாட்டைக் காப்ப தாகும. இதறகு என் செயல்வேண்டும்?

தமிழ்நாட்டிலுளள பல சாதி சமய இளைஞர்களைக் கொண்ட சஙகங்கள் பல, தமிழ்நாட்டில் ஆங்காஙகே தோன்றுதல் வேண்டும. அச்சங்க வாயிலாகத் தமிழர்கள் வரலாறு அறிவுறுத்தப் பெறல்வேண்டும். அவ்வறிவுறுத்தலால் இளைஞர்கள் தங்களைத தமிழர்களென்று உணர்வார்கள். அவ் வுணர்வு நாட்டைக் காக்குமென்பது ஒருதலை.

இப்போழுது தமிழ் மக்களுக்குள் ஒற்றுமை நிறுத்த வல்லது ஒன்றே. அது தமிழ்மோழி. பல வகுப்பாளரும் - வகுப்புப் பிணக்கில் தலைப்பட்டுளோரும் - சாதி சமய நிலைகளில் வேறுபட்டிருப்பினும், அவரனைவரும் தமிழ்மொழி பேசுவதில் ஒன்றுபட்டிருக்கிறார். எல்லார்க்கும் பொதுவாக உள்ள தமிழ்மொழி வாயிலாகத் தமிழ்நாட்டில் ஒற்றுமை காணலாம்; உண்மைத் தமிழ்நாட்டையும் உயிர்ப்பிக்கலாம்.

வகுப்புப் பிணக்கும் போரும் மலியும் இந்நாளில், தமிழ் நாட்டில் ஒற்றுமை காணத் தமிழரியக்கம் எவ்வளவு இன்றியமையாததென்பதை இயம்ப வேண்டுவதில்லை. உண்மையாக வகுப்புப் பிணக்கை ஒழிக்க விரும்புவோரனைவரும் இவ்வியக்கத்திற் சேரலாம். நல்லதோரியக்கத்துக்கு நாட்டில் உதவி கிடைத்தலரிதென்பதை நாம் உணர்வோம். எல்லா உதவிகட்கும் மேலாகக் கடவுள் உதவியிருக்கிறது. அக்கடவுள் உதவி நாடித் தமிழரியக்கத்தைக் காண அறிஞர் முயல்வாராக. அவ்வியக்கத்தில் இளைஞர்கள் சேர்ந்து நாட்டுக்கு நலஞ்செய்வார்களாக. (20-8-1926)

# ஆந்தர தேசம்

ஆந்தர தேசம்; அறிவுத்தேசம்; அன்புத் தேசம்; ஆனந்ததேசம். ஆந்தர தேசத்தில் இப்பொழுது அறிவு மலர்ந்து, அன்பு காய்த்து, ஆனந்த ரசம் பொழிகிறது. அறிவும் அன்பும் ஆனந்தமும் பொங்கித் ததும்பிக் கோதாவரியாகவும், கிருஷ்ணாவாகவும், துங்கபத்ராவாகவும் ஓடுகின்றன. அறிவும் அன்பும் ஆனந்தமும் இப்பொழுது ஆந்தரத்தில் உண்மையால், அஃது உலகம் போற்றும் ஒரு தேசமாக இலங்குகிறது. பொதுவாக உலகமும், சிறப்பாகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் ஆந்தரதேசத்தை நோக்குகின்றன. ஆந்தர தேசத்தின் மாண்பு என்னே! என்னே!!

ஆந்தரமாதின் அழகிய முகம், நமது அகக்கண்ணுக்குப் புலனாகும்போது, வந்தேமாதர முழக்கமும், சுயராஜ்ஜியக் கொடியொலியும், சுதந்திர தேவியின் தாண்டவமும், சுதேசிய நறுமணமும் நமபுலன்களைக் கவர்கின்றன. பரதேசிய நாற்றமே வீசவில்லை. மனமும் பேச்சும் செயலும் சுதேசிய மயமாயிருக்கின்றன. சுதேசியம் பரந்துள்ள இடத்தில் சுதந்திரதேவி தாண்டவம் புரிதலும் சுயராஜ்ஜியக் கொடி பறத்தலும் இயல்பே.

ஆந்தர மாது சுதேசியத் தவங் கிடந்தமையால், அவளுக்குத் தியாக உணர்வு பிறந்தது. தியாகத்தால் சுதந்திர தேவி தரிசனங் கிடைத்திருக்கிறது. சுதந்திரதேவி தாண்டவமிடும் இடங்களில் அறிவும் அன்பும் ஆனந்தமும் பொங்கித் ததும்பும். அறிவுக்கும் அன்புக்கும் ஆனந்தத்துக்கும் ஊற்றாயிருப்பது சுதந்திரமேயாகும். சுதந்திரம் இல்லாத இடத்தில் அம்மூன்றும் ஓங்கி வளரா. சுதந்திர ஊற்றைத் திறக்குங் கருவி தியாகமாகும். ஆந்தரம் தியாகத்தால் முனைப்பை ஒழித்துச் சுதந்திர வுணர்வுபெற்ற தேசமாயிருத்தலால், அதை அறிவுத் தேசமென்றும், அன்புத் தேசமென்றும், ஆனந்தத் தேசமென்றும் நாம் கூறி மகிழ்கிறோம்.

தமிழ் நாட்டுக்கு அணித்தாயுள்ள தெலுங்குநாடு இப்பொழுது உலகம் போற்றும் ஒருநாடா இலங்குதற்குக் காரணம் யாது? இந்தியாவில் கிளர்ச்சி மிகுந்த தேசம் வங்காளம் என்று சொல்லப்பட்டு வந்தது. இப்பொழுது தெலுங்கு வங்காளத்துக்கு வழி காட்டுகிறது. வங்காளத்தையும் பின்னிடச் செய்யும் ஆற்றல் ஆந்தரத்துக்கு எவ்வாறு உண்டாயிற்று? ஆந்தர தேசத்தின் கிளர்ச்சி வேகம், வங்காளம், பாஞ்சாலம், மஹாராஷ்டிரம் முதலிய நாடுகளையுங் கடந்து, விரைந்து விரைந்து ஓடுதற்குக் காரணம் என்ன என்று ஆராயவேண்டுவது அணித்தாயுள்ள தமிழ்மக்களின் கடமை. தமிழ்நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் 'நமக்கணித்தாயுள்ள தெலுங்கர்க்கு இவ்வளவு வீரம், மனவுறுதி, அஞ்

சாமை உண்டான தற்குக் காரணம யாது?'' என்று ஆராய்நது உண்மை காணலவேண்டும. காரணத்தை ஆராய்வோம்.

காரணம என்னவோ என்னும மலைவு தமிழ்மககளுக்கு வேண்டாம். காரணம மிகச சிறியது. அது சிறியதாயினுஞ் செயலால பெரியது. சிறியதென்று அதைத தள்ளுவது பெரு மையாகாது. ஆநதர தேசமும பிற தேசஙகளைப்போல் உறங கிக்கொண்டே யிருநதது. வஙகாளம எழுநது நின்று வீராட்டகாசஞ் செய்தபோது, தமிழ்நாடு காட்டிய எழுச்சி கூட தெலுஙகுநாடு காட்டவில்லை. அவவளவு உறககத்தி லிருநத ஆநதரம, திடீரென உலகம புகழும ஒரு தேசமாக மாறி, வீறுகொண்டு நிறபது போறறத தககதே.

ஆநதரர்கள் முதலாவது செய்த முயறசி, காஙகரஸ்வாயி லாகக் கிளாசசி செய்துசெய்து, தமிழ்நாட்டினின்றும் பிரிநது தங்கட்கென ஓரெல்லை வகுத்துககொண்டமையே. அவா, தெலுஙகு நாட்டைனத தனிமைபபடுத்திக்கொணட தன் நோக் கம், தம மொழியை ஓமபி வளர்க்கும பொருட்டென்று சொல லப்பட்டது.ஆநதர மககளா தஙகள் நாட்டைத தனிமைப்படுத திக்கொண்ட பினனர்த தங்களா தெலுங்கு மொழியை வளாக் கப் பெருமுயற்சி செய்தார்கள்; மொழி வளாச்சிக்கெனப் பல கழகஙகள் கண்டாாகளா. பல அறிவு நூல்கள் தெலுஙகில எழுதபபட்டன. ஆநதராாகளா தஙகள் மொழியை உயிரினும ஓமபி வநதார்கள். அவர்கள் சுதேசியததுககு அடிப்படை சுதேச பாஷை என்பதை நன்கு உணாநது நடநதமை, அவர்கட்கு இபபொழுது மாண்பு தேடிக் கொடுததிருககிறது. தெலுங்கர்கட்கு இப்பொழுது சிறப்பை அளித்தது, அவாபா லுள்ள தாய்மொழிப் பற்றேயாகும். ஆந்தர மக்கள், தங்கள் வீடு களில்-கழகங்களில்-தாய் மொழியையே பேசவேண்டுமென விரதங் கொண்டார்கள். அவ்விரதம், இப்பொழுது ஆந்தரத்தை வீரம், உண்மை, உறுதி, ஒற்றுமை, அஞ்சாமை செறிந்த தேச மாக மாற்றி யிருக்கிறது. ஆநதர தேசம் முன்னேற்றமடைநத தற்குக காரணம, ஆநதர மக்கள் தஙகள் தாய் மொழியைப் பொன்னேபோல் போற்றி வளர்த்தமை என்று கூறலாம்.

இந்தியாவிலுள்ள எல்லா நாடுகளிலும், நாகரிகத்திலும் பிற அறிவு வளங்களிலும் மேம்பட்டு விளங்கிய தமிழ்நாடு, இப்பொழுது எல்லாத் துறைகளிலும் தேய்வுற்று வருவதற் குக் காரணம், தமிழ் மக்கள் தாய்மொழியினிடத்துப் பற்றுக் கொள்ளாமை என்று எவருங் கூறுவர். தமிழ்மக்கள் தாய் மொழியைப் போற்றுவதில்லை என்பதை அறிஞர் பலரும் ஒத்துக்கொள்வர். சுயராஜ்ஜியம் தோற்றமுறும் இந்நாளிலும் தமிழ் மக்கள் நாட்டுமொழியில் பற்றுக் கொள்கிறார்களில்லை. காங்கரஸ் கூட்டங்களிலும் நம்மவர்கள் தாய்மொழி பேச நாணுகிறார்கள். இஃதென்ன அறியாமையோ தெரியவில்லை. ஆந்திர தேசத்தில் கூடும் காங்கரஸ் கூட்டத்தில் ஆங்கிலந் தலைகாட்டுமோ? ஆங்கிலங் கற்ற ஆந்திரரும் அநாவசியமாக ஆங்கிலம் பேசமாட்டார். அவரும் தம் தாய் மொழியாகிய தெலுங்கையே பேசி மகிழ்கிறார். இதனால் ஆங்கிலம் படித் தல் கூடாது பேசுதல் கூடாது என்று நாம் கூறுவதாக நேயர்கள் கருதலாகாது.

மனிதன் ஆங்கில மொழியோடு ஆயிரம் மொழி பயில லாம். ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொருவித வனப்பும் இன்பமுமிருக்கின்றன. இத்தலி ஜெர்மனி முதலிய இடங்களி லுள்ள சிலர் சமஸ்கிருதம் பயில்கிறார். அவர்கள் சமஸ் கிருதம் வயிற்றுப் பிழைப்புக்காகவோ பயில்கிறார்கள்? இல்லை! இல்லை!! அறிவு வளர்ச்சிக்காகவே அன்னார் அம் மொழி பயில்கிறார். ஆங்கிலப் பயிற்சி மேம்பாட்டால், தாய் மொழியைப் போற்றாது விடுவதனால், சுதேசியத்தில் பற்றுச் செல்லாதொழிகிற தென்பதையே நாம் ஈண்டு வலி யுறுத்துகிறோம். ஒத்துழையா இயக்கந் தோன்றியுள்ள இந் நாளிலும், தமிழ்நாட்டார் காங்கரஸ் கூட்டங்களில் வெட்க மில்லாமல் ஆங்கிலம் பேசி மகிழ்கிறார். இவ்வறியாமைக்கென் செய்வது?

ஆந்திர தேசத்தார் தேச பாஷையை வளம்படுத்தி, அப்பாஷையினிடத்துத் தேசத்து மக்களின் பற்றுப் பதியு மாறு செய்து, தேச சேவையில் தலைப்பட்டனர். இப் பொழுது அவர் நாட்டில் வெற்றி முரசம் முழங்குகிறது;

எங்கணும ராட்டின ஒலி; எஙகணும் தறி ஓசை; எங்கணும் கதருடை; எங்கணும் சுதேசியம. ஆநதரதேசம் சுதேசிய மயமாயிருககிறது. ஆண் மக்கள பெண் மககள் குட்டி குழநதை அனைவரும் தேசத தொண்டு செய்ய முனைநது நிற்கிறார். தாசிகள தங்கள் தொழிலை விடுத்துத் தேசத் தொண்டு செய்கிறார்களாம. பெண் மக்கள் வீடுவீடாக நுழைநது கதர் உடை தரிக்குமாறு சகோதரர்களை வேண்டு கிறார்களாம. பெண் தெய்வங்களின் வேண்டுகோளை மறுக்க எந்தப் பாவிக்குத்தான் மனம் எழும?

இப்பொழுது ஆநதர தேசம காங்கரஸ் கட்டளை வழி நின்று ஒழுகி வருகிறது. ஆநதர சகதி இனி அடங்காது போலும். ஆநதரம் ஆத்ம சக்தியில உறுதிகொண்டு நிற கிறது. உலகம் ஆநதர தேசததை நோக்குகிறது. ஆநதர தேசம தியாகததுககுச் சிததமாயிருக்கிறது. கடவுள் ஆநதர தேசததைக் காப்பாராக. ஆந்தரம் வாழ்க.

தமிழ் நாடே! உனது சகோதர நாட்டைப பார். அங்கே என்னென்ன நிகழ்கின்றன? அததேசததின் ஒற்றுமையை நோக்கு; உறுதியைக் காண். உனக்கு அநத ஒற்றுமையும உறுதியும என்று வரும? உன் மக்கள் உன் மொழியில பற் றுக் கொள்வதில்லை; அவாகள் பொறாமைக்கு இரையாகிறார் கள். பொறாமையும் மொழிப்பற்றும் உண்டாகுமவரை நீ ஆநதர தேசம்போல ஆகமாட்டாய். காங்கரஸ் கூட்டஙகளி லும உன மக்கள் உன மொழியைப் பேச நாணுகிறார்கள். உன் பழம பெருமைகளே உன்னைச சிறப்பித்து வருகின்றன. உன்னைக் கடவுள் ஆசீர்வதிப்பாராக. (27-1-1922)

# நாட்டுச் சிறப்பு



'நாட்டுச் சிறப்பு' என்னுந் தலைப்பைக் கண்டதும் சிலர் 'புராணம்' என்பர்; சிலர் 'பழம்பாடம்' என்பர்; சிலர் 'ஏதோ வருணனை' என்பர். நம் முன்னோர்கள் எக் காவியம் பாடினும் நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்பு நவின்ற பின்னரே, மற்ற வரலாற்றின்மீது கருத்தைச் செலுத்துவது வழக்கம். இந்நாளில் நாட்டின் இயல்பு இன்னது என்றும், இயற்கை இன்பம் இத்தகைத்து என்றும் உணராத வழியில் மக்கள் வாழ்வு இயங்குகிறது.

பண்டைப் புராணத்துள்ள நாட்டையும், இக்காலத்துள்ள நாட்டையும் உற்று நோக்கினால் உண்மை புலனாகும். இக்காலத்து நாட்டு நிலையை விரித்துரைக்க வேண்டுவதில்லை. கண்கூடாகக் காட்சியளிக்கும் ஒன்றைப்பற்றி விரிவுரை எற்றுக்கு? ஒரு நாட்டின் நிலையை எதைக்கொண்டு உணரலாம்? அந்நாட்டில் மக்கள் வயிறார உண்டு மகிழ்ச்சியோடு வாழ்கின்றார்களா இல்லையா என்பது கொண்டு அந்நாட்டின் நிலையை உணர்தல் கூடும். ஒவ்வோரில்லிலும் வாழ்வுக்குரிய பொருள் போதியதில்லையேல், அங்கு மகிழ்ச்சி யாண்டிருந்து அரும்பும்? 'பொருளிலார்க்கு இவ்வுலக மில்' என்றும், 'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியு மன்றோ' என்றும் நமது நாட்டு அறிஞர்கள் கூறிப்போந்தார்கள்.

ஒரு நாட்டின் அகம் இல்லறமாகும். அதன் நிலையை அளந்து கண்டால், நாட்டின் நிலை நனிவிளங்கும். 'இல்லறம், அன்பு கால்கொண்டு நடத்தல் வேண்டும்' என்று பெரியோர்கள் அருளிய மெய்ம்மொழிகள் ஈண்டுக் கருதற்பாலன. தற்காலம் நாட்டில் அன்பு நிலை எவ்வாறுளது?

சுருங்கக் கூறின், மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத அன்புநிலை குலைந்துவிட்டது என்று கூறலாம். அன்புக்கு உறையுள் இல்லறமன்றோ? அவ்வில்லறத்தை நடாத்தப் புகும் தலைவன் தலைவியர்க்குள் அன்பு நிலவுகின்றதா?

மன்ற வழக்குகளில் தலைவன் தலைவியர் வழக்கு எத்துணை என்பதை ஆராய்ந்தால் அது தற்போதைய நிலையை விளங்கச்செய்யும். அன்பில்லா இல்லறம் இல்லறமாகுங்கொல! காமவேட்கையால் ஒருவன் ஒருத்தியைக் கொண்டு பிள்ளைகளைப் பெறும் முறையில் அன்பேது? அருளேது? அன்பினின்றும் பிறவாத பிள்ளைகள் உலகில் எவ்வாறு வளரும்? எவ்வாறு வாழும்? இதைப்பற்றி விரிவுரையும் வேண்டுமோ?

இல்லற நேயத்துக்கு மகிழ்ச்சி இன்றியமையாதது. மகிழ்ச்சிக்குப் பொருள் வேண்டற்பாலதென்பது மேலே சொல்லப்பட்டது. பொருள் வருவாய் சுருங்குமிடத்தில் எல்லாஞ் சுருங்கும். பொருள் வருவாய்க்குத் தொழில் முறைகள் மலிந்து கிடத்தல்வேண்டும். நமது நாட்டின் தொழில்நிலை நேயர்கட்குத் தெரியும். நமது நாட்டு மக்களின் வாழ்விற்கு இன்றியமையாத பல பொருள்கள், மேல் நாட்டுத் தொழிற் களிற் செய்யப்படுகின்றன. தொழின் முறைகளை ஒழுங்குபடுத்தற்கும், பிற நாட்டுப் பொருளைத் தகைதற்கும் நாட்டில் ஜனப்பொறுப்பாட்சியில்லை. என் செய்வது! நாட்டில வறுமை மலியாது வேறென் மலியும்? வறுமையுள்ள இடத்தில் மகிழ்ச்சி ஏது? மகிழ்ச்சியில்லா இடத்தில அன்பு ஏது? அன்பில்லா அறம் எங்ஙனம் இல்லறமாகும்? உற்ற வயதில் கிளர்ந்தெழும் காமவேட்கைக்கென ஒருவன் ஒருத்தியைக் கொள்ளும் முறை அன்பு முறையாகாது. இதைப்பற்றி விரித்துக் கூறினால் கட்டுரை நீளும்.

அன்புக்குரிய இல்லற நிலை கோணிநிற்பின், எல்லாம் கோணியே நிற்கும். இதுவே நமது நாட்டின் தற்காலச் சிறப்பு! இச்'சிறப்பில்' வாழ்வோர் நிலையைப் பலபட அளந்து கூறவேண்டுவதில்லை. நாட்டைச் சிறிது உற்றுநோக்குவோம். என்ன காண்கிறோம்? எங்கணுந் தேர்தல் முழக்கம்; எங்கணுந் தேர்தல் கூட்டம்; எங்கணுந் தேர்தல் வழக்கு. ஏழை மக்களை வேட்டையாடவும், தேசத்தை ஏமாற்றவும், தற்கால நி...த்தில் வீழ்ந்து கிடப்போர் - நமது பழைய நாட்டைக் ...றும் 'புனிதா' - எத்துணைக் கட்சிப் பிளவுகளை - எத்
சில் ...ப்பு

தனைச சாதிப்போர்களை - எவ்வளவு சமயச
வருககிறுர் ; கிளப்புகிறா ; எழுப்புகிறுர். அனபும அருளும
ஆறுபோல் ஓடிய நாட்டில், இதுபோழ்து என்ன என்ன ஓடு
கின்றன ? திட்டும் வசையும் இரத்தமும் ஓடுகின்றன. கலகம்
வளாக்கப் பாழும் பத்திரிகைகளிருக்கின்றன.

மககள கருத்தை ஈர்க்க வல்ல தொழின் முறைகள்
போதிய அளவு நாட்டிலின்மையால, ஏழை மக்கள் வெளி
நாடுகளுக்கு வயிறு பிழைகக ஓடுகிறுாகள். மிகுதியுள்ள மக்
கள், அதிகாரவர்ககததுககுத் துணை நிற்போா வழிநின்று
அவா ஏவல செய்வோராகிறுா. தறபோது நாட்டில் நிகழ்ந்து
வரும தோதல் பிணககு, சாதிப்போர், சமயசசண்டை முத
லியவறறிற்குத் துணை நிறபவர் ஏழை மக்களேயாவர். கார
ணம் வறுமை ; வயிற்றின் கொடுமை. வயிற்றின் கொடுமை
என்னதான் செய்யாது ? திட்டச செய்யும ; அடிககச செய்
யும ; கொலையுஞ் செய்யததூண்டும. அநதோ ! நம்ப ஈகள்
நிலையை, நேயர்களே ! சிந்தியுங்கள.

நாம எங்நிலை எய்தியிருககிறேம ! அரசராயிருந்தோம ;
ஆண்டியானேம். அநதணரா யிருந்தோம ; வெநதணரா
னேம். வேளாளரா யிருநதோம ; வேலைக்காரரானேம.
என்னே ! நமது நிலை. நமது தவமெஙகே ? நமது யோக
மெஙகே ? நமது போகமெஙகே ? நமது உழுவெஙகே ? இவை
யெலாமிழநது நாமும மனிதர்களாக வாழ்கிறேம ! இதுவா
நமது வாழ்க்கை ? இதுவா நமது நாடு ? இதுவா நமது
சிறபபு ? நமது பழைய நாட்டையும, அதன் சிறப்பையும்
குறைகூறுந தற்காலக் கல்வியாளரே ! நினைமின் ! நினைமி
பழைய நாட்டுச சிறப்புக்களைக் கூர்ந்து நினைமின் ! அவை
இதுபோழ்து நாட்டில் இலலை ; ஏட்டிலிருக்கின்றன.
வேட்டுரைகள் நமககு இனப அனபு அமிழ்தாய் மகிழ்
யூட்டுகின்றன.

நந்தமிழ் நாட்டின் சிறப்புப் பலப்பல புராணங்களில்
ஓதப்பட்டிருக்கிறது. அப்புராணங்களுள், கருத்துககு
எளிய நடையில் விளககும் புராணம பெரியபுராணம். தப்
நா ?

பெரியபுராணத்தை ஈண்டு எடுத்துக்கொள்கிறேன். அப்புரா
ணம் பாடியவர் தமிழ்நாட்டில் வாழ்ந்தவர், அமைச்சுத்
தொழில் புரிந்தவர்; தமிழ்நாட்டின் இயற்கை வளங்களை
நேரே கண்டு, அக்காட்சியைப் பாட்டாகப் பாடினவர். பெரிய
புராணத்துள் போந்துள்ள நாட்டுச் சிறப்பு சோழநாட்டைப்
பற்றியது. மற்றைய நாடுகளின் சிறப்புக்களும் அப்புராணத்
தின்கண் பல இடங்களில் ஓதப்பட்டிருக்கின்றன. சிற்சில
பகுதிகளை ஈண்டு எடுத்துக் காட்டிச் செல்கிறோம்.

அத்திருநாட்டுச் சிறப்பின் முதற்பாட்டு வருமாறு :—

"பாட்டியல் தமிழுரை பயின்ற எல்லையுள்
கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையான் நவில லுற்றனன்."

பாட்டு என்று ஆசிரியர் தொடங்குகிறார். தமிழிற்கும்
பாட்டிற்குமுள்ள தொடர்பு கவனிக்கத் தக்கது. மகிழ்ச்சி
தரக்கூடியது பாட்டன்றோ? அப்பாட்டைத் தமிழில் இசைத்
தால் என்ன இன்பம்! 'பாட்டியல்தமிழ்' என்னும்போதே
உள்ளத்தில் இன்பம் ஊர்கிறது. இரண்டாவது, மன்னர்
வீரம் குறிக்கப் பெற்றிருக்கிறது. மன்னன் வீரமன்றோ
நாட்டின் உயிர்? சோழநாட்டைக் 'காவிரிநாடு' என்று சேக்கி
ழார் செப்புகிறார். சோழநாட்டிற்குப் 'புனல் நாடு' 'நீர்நாடு'
என்றும் பெயருண்டு. தமிழின் பாட்டியல்புக்கும் சோழன்
வீரத்துக்கும் துணை செய்வது காவிரியாதலால் 'காவிரிநாடு'
என்றார். காவிரி பல நாடுகளில் பாய்ந்து ஓடினும் அது பெரி
தும் வளஞ்செய்யுமிடம் சோழநாடேயாகும். அக்காவிரியின்
வளம், நாட்டையும் நாட்டுறை மக்களையும் பிறவற்றையும்
பாட்டியல் தமிழாக்கும் பான்மையது என்பது குறிப்பு.
பாடல்களின் பொருளையாதல், நயத்தையாதல், அழகை
யாதல் ஈண்டு விரித்துக் கூறிப் பெரியபுராணப் பிரசங்கம்
நிகழ்த்தப் புகுந்தோமில்லை. எடுத்த கட்டுரைக் கேற்பச்
சில குறிப்புக்களைமாத்திரம் பொறித்துச் செல்கிறேன். ஆசிரி

யா காவிரி ஓட்டத்தைச் சில பாடலாக்கி, ஓரிடத்தில் அவ் வாற்றொழுக்கை,

"வண்ணநீர் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பே அறங்களும் வளர்க்கும் ஈகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் **கருணையின் ஒழுக்கம்** போன்றது"

என்று கூறியுள்ளார். காவிரிப் பெண்ணை, உமையெனும் பெண்ணரசியாரோடொத்துக் கூறியதும், 'உண்ணெகிழ் கருணையின்' என்றதும் கூர்ந்து நோக்கத்தக்கன. சேக்கிழார் தாமெடுத்த அன்புப் புராணத்துக்கேற்ப உவமைகள் எடுத்தாண்டிருத்தலுங் கருதற்பாற்று. படிப்போர் உள்ளத்தைத் தீய வழியிற் கடவும் உவமைகளைச் சேக்கிழார் கருத்தில் உலவுதவில்லை. காவிரி, கால்கொண்டு நீர் நிலைகளை நிரப்புவதையும், வயல்களில் புகுவதையும், உழவர்கள் தொழில் புரிவதையும், பெண் மக்கள் மகிழ்ச்சியோடு ஆடியும் பாடியும் விளை நிகழ்த்துவதையும் ஆசிரியர் பாட்டில் நமக்குக் காட்டிச் செல்வதைப் புராணத்திற் காண்க.

இத்துணை வளத்தைக் காவிரியாற் பெறும் சோழநாட்டின் வயல்களின் கொழுமையையும் செழுமையையும் விளங்க உரைக்கவும் வேண்டுங்கொல்! காவிரிவளங் குன்றியுள்ள இந்நாளிலும், சோழநாடு ஒருவித வளத்தைக் கொழித்துக் கொண்டிருத்தல் கண்கூடு. அந்நாளில் அன்பிற் சிறந்த அன்பர் புராணங் கூறப் போந்த சேக்கிழார், வயல்களையும் அவைகளிலுள்ள பயிர்களையும் அன்புப் பாக்களால் நமக்கு வழங்கியுள்ளார். அவைகளில் இரண்டு வருமாறு:—

"சாலிநீள் வயலின் ஓங்கித் தன்னிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவுறும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு **சுருள்விரித் தரனுக் கன்பர்**
**ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்க ளெல்லாம்**"

"பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள் **தலையினால் வணங்கு மாபோல்**
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம்"

விற்கே செல்வேன்; இல்லையேல் இங்கிலாந்திலேயே உயிர் துறப்பேன்' என்றன்றோ கூறினார்? அவரது உரிமை வேட்கையை என்னென்றியம்புவது? அப்பெறற்கரிய உரிமைச் செல்வத்தை நாடு இழந்தது.

மௌலானாவின் வேட்கைக்கேற்ற நெஞ்சும், நெஞ்சுக் கேற்ற நோக்கும், நோக்குக்கேற்ற நடையும், நடைக்கேற்ற பேச்சும், பேச்சுக்கேற்ற செயலும் அவர்பால் அமைந்திருந் தன. அவரது உரிமை வேட்கையையும் - அஞ்சாநெஞ்சை யும் - சிங்க நோக்கையும் - பீடுநடையையும் - மின்னொளியை யும் - கோடை இடியையும் - பெரும் புயலையும் ஒருங்கே திரட்டி எழுப்பவல்ல பேச்சையும், விடுதலைப் போரையும் நாடு இனி என்றே கேட்கும்? என்றே காணும்? என்றே பெறும்? மௌலானாவின் பிரிவால் நாட்டுக்குற்ற நட்டம் அளப்பரிது. அதற்கு ஈடு காண்டல் இன்றில்லை.

மௌலானா முகமது அலி இளமையில் கற்பன கற்றுக் கேட்பன கேட்டவர்; அவர் இக்காலத்துக்கு இன்றியமை யாத ஆங்கிலத்தில் புலமை பெற்றவர். பட்டதாரி; சமயக் கல்வியும் உடன் பெற்றவர். உரிமைப் போராட்டத்தில் அவ ரைத் தலைப்படுத்தியது அவரது சமயக் கல்வியாகும்.

மௌலானா முகமதுஅலி பட்டதாரியாயிருந்தும், அதிகார வர்க்கத்தின் அடிவருடி உத்தியோக வேட்டையாட விரும் பினாரில்லை. அவர் நாட்டின் அடிமைத்தளையை உடைத்தெறி யும் முயற்சியிலே முனைந்து நின்றார். அடிமையை அறுத் தொழிப்பதில் அவரது வாழ்வு கழிந்தது.

உரிமை உணர்வுள்ள இடத்தில் தியாகமிருத்தல் உண் மை. மௌலானாவின் உரிமை வேட்கை அவரைத் தியாக மூர்த்தியாக்கிற்று. மௌலானா 'காம்ரேட்' 'ஹாமதார்த்' என்னும் பத்திரிகைகள் நடாத்தி நாட்டைத் தட்டி யெழுப் பியதும், அதன் பயனாகவும், வேறு சில காரணம்பற்றியும் அரசாங்கத்தார் அவர்தஞ் சொத்துக்களைப் பறிமுதல்செய்து அவரைக் காப்பில் வைத்ததும் நேயர்கட்குத் தெரியும். ஐரோப்பாப் போர்க்கால முழுவதும் நமது இந்திய சிங்கம்

காப்பிலே வைக்கப்பட்டிருந்தது. தேசத்தின் பொருட்டும், மார்க்கத்தின் பொருட்டும் தமக்கிருந்த பொருளெல்லாவற்றையும் இழந்த தியாகமூர்த்தி நம் மௌலானா முகமத்அலி.

பொருளிழப்பும், காப்பு வாழ்வும் மௌலானாவை அதிகாரவர்க்கத்துக்குப் பணியச் செய்யவில்லை. 1919-ம் ஆண்டில் அவரும் அவர் தமயனாரும் காப்பினின்றும் விடுதலையடைந்தனர். விடுதலை அடைந்ததும் அலிசகோதரர்கள் யாண்டுச் சென்றார்கள்? அதுபோழ்து அமிர்தசரசில் கூடியிருந்த காங்கரஸ் 'வீட்டிற்கு' நேரே போந்தார்கள். அங்கே அப்பொழுது நமது மௌலானாமுகமத்அலி நிகழ்த்திய சொற்பெருக்கில் மிடைந்தெழும்பிய வீரத்தை என்னென்று எழுதுவது? பாஞ்சாலப் படுகொலை கனன்றெரிந்த இடம் அவ்விடம்; காலமும் அக்காலம். அவ்விடத்தில் அக்காலத்தில் மௌலானாவின் வீரப்பேச்சு நெய்யாகிக் கனன்றிருந்த நெருப்பை எழுந்துவிட்டெரியச்செய்தது.

பின்னே எழுந்த ஒத்துழையா இயக்கத்தில் மகாத்மா காந்திக்கு வலதுபுறமாக நின்று மௌலானா முகமத்அலி தொண்டாற்றியது புத்தம் புதிதாக நேயர்கள் நெஞ்சில் நிலைபெற்றிருக்கும். இமயம் முதல் கன்னிவரை, இரவு பகல், இடையிடை ஊண் உறக்கமுமின்றி, காற்றெனத் திரிந்து, தமது கம்பீரத் தோற்றத்தாலும், நோக்கத்தாலும், பேச்சாலும் மக்களுக்குத் தேசபக்தியை ஊட்டியவர் நம் மௌலானா முகமத்அலி. அவர் தேசத்தின் விடுதலைக்கும், கிலாபத்தின் பெயரால் மார்க்கத்துக்கும் நிகழ்த்திய தொண்டு என்றும் மறக்கற்பாலதன்று.

ஒத்துழையா இயக்கத்தின் பயனாக மௌலானா முகமத் அலி சிறை சென்று வெளிவந்த சின்னாளுக்குள் டில்லியில் விசேஷ காங்கரஸ் கூடிற்று. அப்பொழுது ஒத்துழையாதார்க்கும் சுயராஜயக்கட்சியார்க்கும் பெரும் பிணக்கு நேர்ந்திருந்தது. சுயராஜ்யக்கட்சி தமக்குப் பிடியாதிருந்தும், நாட்டிடைத் தோன்றியபிணக்கைத் தீர்க்கும்பொருட்டு மௌலானாமுகமத் அலி ஒத்துழையாதார்க்குப் பலதிறச் சமாதானங் கூறி,

விசேஷ காங்கரஸை வெற்றிபெற நடப்பித்தார். பின்னே காக்கிநாடாவில் மௌலானா முகமத்அலி தலைமையிலேயே காங்கரஸ் கூடிற்று. ஆண்டுமே புயல்கள் நாறுபக்கங்களிலும் கிளம்பின. அவைகளை மிகத திறம்பட அடக்கி, அமைதி யுண்டுபண்ணி, மௌலானா நலவழியில காங்கரஸை நடாததி னார்.

சுயராஜ்யக் கட்சியின் தோற்றங காரணமாகவும, வேறு பல காரணஙகளை யொட்டியும நாட்டிடை ஆஙகாங்கே வகுப் புப பூசல் கனன்றெரியலாயிற்று. அக்கனலைக் கால தேச வர்த்தமான நிலைக்கேறறவண்ணம் அவ்வபபோது தணிக்க வும் மௌலானா முகமதஅலி முயன்று வநதார். நாட்டின விடு தலைக்கு ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை இன்றியமையாதது என்று மகாத்மா காநதி உணர்நது நடநதது போலவே, மௌலானா முகமத்அலியும் உணர்நது நடநது வநதார். இஃது அவரது இயற்கை. இடையிடை அவரது இயற்கையில தத் தளிப்பு ஏற்பட்டதற்குக் காரணங்கள் சில இருக்கலாம்.

லாகூர் காங்கரஸ் கட்டளை வழிநின்று காநதியடிகள் தொடுத்த போரில், மௌலானா முகமதஅலி கலவாது, பிரிட் டிஷ் அரசாங்கத்தார் அழைப்புக் கிணங்கி, இங்கிலாநது நோக்கினும், அவர் நெஞ்சம் நாட்டின் விடுதலையிலும், ஹிநது - முஸ்லிம் ஒற்றுமையிலும படிநது கிடநதது உண்மை. வட்ட மேஜை மகா நாட்டில் அவர் பேசிய பேச்சு அவரது மனோ நிலையைப் புலப்படுததிறறு. அவர் இஙகி லாநதில 'உரிமை இநதியாவையே நோககுவேன், இல்லை யேல இஙகிலாநதிலேயே இறநது படுவேன ; அடிமை இநதி யாவை நோககேன்' என்று மொழிந்ததும, 'நாஙகள எவர் பிரதிநிதிகள் என்பது தெரியவில்லை' என்று பகர்ந்ததும், வட்ட மேஜை மகா நாட்டில எழுநத ஹிநது - முஸ்லிம் பிணக்கைப் போக்கக் கோலிய திட்டமும அவரது மனோ நிலையை உள்ளங்கை நெல்லிக் கனியெனப் புலபபடுததுகின் றன. தேசபகதர் யாண்டிருநதா லென்ன ? தேசபக்தி அவரை விடுத்து அகலாது.

மிக நெருக்கடியான வேளையில் - நோய்வாய்ப் பட்டிருந்த சமயத்தில்-மௌலானா முகமத்அலி இங்கிலாந்து நோக்கினார். அதனால் நாட்டுக்கு நலன் விளையுமென்று அவர் கருதி யிருக்கலாம். நலன் விளைவிக்கவே அவர் முயன்றார். 'உரிமை இந்தியாவைக் காணல் வேண்டும். இல்லையேல் இங்கிலாந்திலேயே உயிர் துறப்பேன்' என்று அவர் கூறியது தீர்க்க தரிசன மொழியாய் விட்டது. வட்ட மேஜைமகா நாட்டில் மௌலானா போன்றார் எத்துணை பேரிருப்பர் என்பது உலகுக்குத் தெரியும்.

மௌலானாவின் பிரிவால் இந்தியாவிற்கும், முஸ்லிம் உலகிற்கும் பெருநட்டம் நேர்ந்தது. இந்தியா, தன் விடுதலையிலே தணியாக் காதல் கொண்டிருந்த ஒரு புதல்வரை - சிறந்த தேச பக்தரை - இழந்தது. முஸ்லிம் உலகம் ஒரு சமய பக்தரை - வீரரை - இழந்தது.

மௌலானா முகமதுஅலி நாட்டு விடுதலை வேட்கையை எழுப்பிச் சென்றார்; அதை ஒவ்வொருவர் உள்ளத்திலும் பதிவித்துச் சென்றார். அவ்வேட்கையை வளர்த்து, நாட்டுக்கு விடுதலை தேடி, அவர் இறுதிக் காலத்தில் மொழிந்த 'உரிமை இந்தியா'வில் வாழ முயல்வது, அவர் தொண்டுக்குத் தேசத்தார் கைம்மாறு காட்டும் நினைவுக் குறியாகும்.

கலலெல்லாம் மாணிக்கக் கல்லல்ல. மனிதரெல்லாம் மனிதரல்லர். மௌலானா முகமத்அலி மனிதப் பிறவிக்குரிய வினைகளை நிகழ்த்தினார். முகமதுஅலி செல்வஞ் சிறந்த குடும்பத்தில் பிறந்தார்; தேசத்தின் பொருட்டு அச்செல்வத்தை இழந்தார்; இழந்தும் சலிப்புறாது தேசசேவை செய்தார். இத்தியாக மூர்த்தியை அகாலத்தில் இழக்க நேர்ந்ததைக் குறித்து எவரே வருந்தார்? மௌலானா முகமத்அலியின் பிரிவு குறித்துப் பாரத நாடே வருந்துகிறது; முஸ்லிம் உலகம் வருந்துகிறது; அவர்தம் நண்பர் உற்றார் உறவினர் வருந்துகிறார்; எல்லாரும் வருந்துகிறார்; எலலாம் வருந்துகின்றன.

தம்பியாரை இழந்த தமயனார் நிலை எவ்வாறிருக்கும்? மௌலானா முகமத்அலியும் மௌலானா ஷவுக்கத்அலியும் சகோதர ஒற்றுமைக்கும் நேயத்துக்கும் இந்நாளில் எடுத்துக் காட்டாக விளங்கியவர்; ஒருயிர் ஈருடலாக வாழ்ந்தவர்; அலி சகோதரர் என்றே வழங்கப் பெற்றவர். ஒருவர் பிரிவு மற்றொருவர்க்கு எப்படியிருக்கும்?

சிங்கமுகன் இறந்துபட்ட பொழுது, சூரபன்மன் அழுத அழுகை இங்கே நினைவிற்கு வருகிறது.

'பொன்னை நிலத்தனைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகும்
என்னை யுடைய **இளையோனே** இப்பிறப்பில்
உன்னை யினிப்பெறுவ துண்டோ வுரையாயே'

உடன் பிறப்பை மீண்டும் பெறல் அரிது; அரிது. மௌலானா முகமத்அலி பெறற்கரிய உடன்பிறப்பு. அவ்வுடன் பிறப்பை இழந்த பெரிய அண்ணா ஷவுக்கத்அலிக்கு எம்மொழியால் ஆறுதல் கூறவல்லேம்.

மௌலானா முகமத்அலி நண்ணிய துறைகளிலெல்லாம் தாமும் நண்ணி, அவர் தம் வாழ்க்கைக்கு உற்ற துணையா யமர்ந்த கற்புக்கரசியின் துயரொழிக்கத் தக்க மருந்தும் உண்டோ? மற்றவர் படுந்துயருக்கும் ஆறுதல்கூறல் இயலாது. மௌலானா முகமத்அலியின் தமயனார்க்கும், மனைவியார்க்கும், மற்றவர்க்கும் 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மௌலானா முகமத்அலியின் இன்னுயிர் ஆண்டவன் ஒளியில் அமைதி பெறுவதாக. சாந்தி! சாந்தி! சாந்தி!

**(7-1-1931)**

